Registered No. M. 3536.

தனிப்பிரதி விலை { உள்நாடு அணா 1 / பர்மா, சிலோன் „ 1¼

# நவசக்தி

"NAVASAKTI"

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

| சந்தா விவரம் | ரூ. அ. |
|---|---|
| வருட சந்தா ... | 4 0 |
| ஆறுமாத சந்தா ... | 2 4 |
| வெளிநாடு-வருட சந்தா ... | 6 0 |

விளம்பர விகிதம்
பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூ. 6 0
சில்லறை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்பட மாட்டாது.

சிலம்பு கஙு — தாதுஸ்ரீ மார்கழிமீ உருவ (8—1—1937) வெள்ளிக்கிழமை — பரல் ந.ச

# தீண்டாமை அரக்கனின் வீழ்ச்சி

(ஆரியூர் - திரு. வ. பதுமநாப பிள்ளை)

நகராத பெருமலையை நகர்த்திநடத்
தியதென்ன, நவிலுங் கங்கை
இகலோகம் புனிதமுற இறங்கிவரச்
செய்ததென, இறைவ னார்தம்
அகமோங்கத் தீண்டாமை யரக்கனவன்
செருக்கடங்க அன்பர் வாழ்த்தப்
புகழோங்கு திருவாங்கூர்ப் புரவலனார்
செய்தபணி புனித மம்மா ! (1)

நீதியால் வந்ததொரு நெடுந்தரும
நெறியினன்றி, நிலவும் பற்பல்
சாதியால் வந்தபல சழக்குகளால்
விளைந்தபல தடைகள் நீக்கி
ஆதிநா யகனடியை ஆலயத்திற்
சென்றுதொழ அனைவ ருக்கும்
கோதிலா உரிமையினைக் கொடுத்ததிரு
மன்னர்புகழ் கூறப் போமோ ? (2)

வாயிலிலே காவலரை வைத்துபல
குலத்தினரை மறித்தி ருந்த
கோயிலிலே, 'இந்து'வெனக் கூறுபவர்
யாவருமே குளிர்ந்து சென்று
தாயினும்பே ரன்புடைய தலைவனடி
தொழும்உரிமை தந்த மன்னர்,
பேயனைய தீண்டாமைப் பேரரக்கன்
கொடுமையெலாம் பெயர்த்திட் டாரே ! (3)

பாட்டினிலே நம்மவர்முன் பகர்ந்தசம
ரசநெறியைப் பகரும் இன்று
ஏட்டினிலே உறங்கவிட்டே எளியோரை
ஒடுக்காமல், எவரும் போற்ற
நாட்டினிலே திருக்கோயில் நலம்பெருகத்
திறந்துவிட்ட ஞான வீரர்,
வாட்டியபுன் தீண்டாமை வல்லரக்கன்
மடிந்திடவே வழிகண் டாரே ! (4)

அறம்வளர்க்க அவதரித்த
அருள்ராமா னுசர்வானில் ஆசி கூறச்
சிறப்புமிகுங் காந்தியவர் சிந்தைகுளிர்ந்(து)
ஆசிமொழி செப்பி நிற்ப
மறப்பரிய பெருவீர மாபணிசெய்
திருவாங்கூர் மன்னர், கோயில்
திறப்பதனால் இணையற்ற சீரியநற்
புகழ்பெற்றுச் சிறந்திட் டாரே ! (5)

(தொடரும்)

# ஆங்கிலப் படிப்பு

'வேலன்'

அத்திபுரத்தில் கிராமக்கணக்கு வேலைபார்ப்பவர் துரைசாமி பிள்ளை. அவ்வூர் மக்கள் கண்முன் அவர் கவர்னராகவே விளங்கினர். அரசராக விளங்கினர் என்று கூறுவதும் மிகையாது. அரசர் எங்கிருக்கிறார்? கவர்னர் எங்கிருக்கிறார்? அவர்கள் இருவரும் வெளியில் எங்கேயோ நகரங்களில் மாடமாளிகைகளில் வசிப்பவர். அக்கிராமத்திலுள்ள குப்பன் நிலங்கள் விளைந்தன; விளைய வில்லை என்று கணக்குப்பார்த்து கிஸ்திவசூல் செய்பவர் யார்? இக்காரணங்களாலேயே துரைசாமி பிள்ளை அக்கிராமத்தாரின் அரசராகவும் கவர்னராகவும் விளங்கினர்.

துரைசாமி பிள்ளைக்கு வருவாயில் குறைவேயில்லை. கவர்னருடைய சம்பளத்தையும், மாதச் செலவையும் கணக்குப்போட்டு அவருக்கு ஏன் இவ்வளவு செலவு செய்யவேண்டும் என்று இக்காலத்துக் கேள்விகள் கேட்கப்படுகின்றன. துரைசாமி பிள்ளையும் இவ்வித விவகாரங்களில் வெகு சமர்த்தர். ஆயினும் கணக்கிலகப்படாத தமது வருவாய்களைக்குறித்து ஊரில் இருப்பவர் யாராவது பொறுமையால் ஏதாவது பேசுவாரென்று எண்ணமே அவருக்குக் கிடையாது.

### உயர்ந்த மதிப்பு

அரசாங்கம் துரைசாமி பிள்ளைக்குக் கொடுக்கும் சம்பளம் வெகுசொற்பமே. அவருக்கு இது வந்தாலென்ன? போனாலென்ன? ஊரார் நிலம் விற்பதும் வாங்குவதுமா யிருந்தால் போதும்! அவருடைய எண்ணத்துக் கேற்பக் காலமும் துணை செய்வதாயிற்று. மழையில்லாத கொடுமையாலும், விலைவாசிகளின் குறைவாலும் விவசாயிகளின் கடன் சுமை அதிகமாயிற்று. அதனால் அவரவர் நிலங்களை விற்க நேர்ந்தது. சிறிது பணமுடையவர் பேராசையால் கடனைத்திருப்பிக் கொடுத்துவிடுவோமென்ற நம்பிக்கையால் கடன் பட்டும் பிறர் நிலங்களை வாங்க ஆசைப்பட்டனர்; இறுதியில் 'இருந்ததும் போச்சே கொள்ளைக்கண்ணு' என்ற பழமொழிப்படி தங்களுடைய பழமையான சொத்துக்களையும் கடனுக்காக விற்கவேண்டியவரானர். இப்படி ஊர்மக்கள் கஷ்டப்படும்போது, மனக் கலக்கமில்லாமல் வாழ்பவர் யார்? அவரே துரைசாமி பிள்ளை. யார் எப்படிப்போனாலும் யாருடைய நிலத்தை யார் வாங்கிக்கொண்டாலும் அவருக்குக் கவலையேயில்லை. கிரயப்பத்திரங்களை யெல்லாம் எழுத வேண்டியவர் அவரே. கிரயப்பத்திரம் அவரிடம் எழுத வராது போகுமாயின் அப்புறம் நிலம் வாங்கினவர்பாடு நாய் பாடு தான். அதனால் எவ்வளவு பணத்துக்குப்பத்திரம் வாங்கினார்களோ அவ்வளவு பணத்தை மக்கள் எழுத்துக் கூலியாகத் துரைசாமி பிள்ளைக்குக் கொடுத்து விடுவார்கள். இப்படியாகப் பணத்துக்குமேல் பணமாகச் சம்பாதித்து வருகிறார் துரைசாமி பிள்ளை.

### சாபம்

சில அன்பர்கள் சில கேள்விகளைக் கேட்டல் கூடும். இப்படிப் பணத்துக்கு மேல் பணம் சம்பாதிக்கும் துரைசாமி பிள்ளை ஏன் பணக்காரராக வில்லை என்ற ஒரு கேள்வியைப் போடலாம். அதற்கும் ஒரு விதமாகப் பதில் கூற வேண்டுவது அவசியமாகும். ஊர்க் கணக்கப் பிள்ளைகள் பணக்காரராகக் கூடாதென்பது ஒரு சாபக்கட்டாம். ஆனால் துரைசாமி பிள்ளையைப் பிடித்துஆட்டியது இச்சாபக் கட்டல்ல. அது அவர்தம் புத்திர சோகமே.

### சாமிநாதன் தோற்றம்

துரைசாமி பிள்ளை தம் இருபத்தைந்தாவது வயதில் கன்னியம்மாள் என்ற அம்மையாரைக் கலியாணம் செய்துகொண்டார். வெகுகாலம் வரை அவர்கள் இருவருக்கும் குழந்தை யில்லாமல் இருந்தது பெரிய வருத்தத்தை யளித்தது. பிறகு துரைசாமி பிள்ளைக்கு 45-வது வயதில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்குச் சாமிநாதன் என்ற பெயரும் சூட்டப்பட்டது. வீட்டில் செல்லப் பெயராகச் சாமு என்று அழைக்கப்பட்டான். சாமிநாதன் என்பது 'தகப்பன் சாமி'யைக் குறிக்கும் பெயராதலால் மகன் தம்மை விடத் திறமைசாலியாக இருப்பான் என்பது துரைசாமி பிள்ளையின் எண்ணம். ஆனால் மகன் எவ்வாறு இருந்தான் என்பது இனிக் கவனிக்கவேண்டிய விஷயமாகும்.

### திண்ணைப் பள்ளிக்கூடம்

குழந்தைக்கு வயது ஐந்தாயிற்று. அத்திபுரத்தில் உள்ளது ஒரு பள்ளிக்கூடமே. அதுவே சுப்பராய பிள்ளையின் திண்ணைப் பள்ளிக்கூடம். ஜில்லா போர்டு பள்ளிக்கூடம் ஒன்றை அவ்வூரில் நிலைபெறுத்த வேண்டுமென்று துரைசாமி பிள்ளை பலகால் முயன்றார். ஆனால் அம்முயற்சி கைகூடவில்லை. தம் பிள்ளையைப் பழைய வழக்கப்படி தெருப்பள்ளிக்கூடத்தில் படிக்க வைக்கப் பிள்ளை அவர்கள் விரும்பவில்லை.

பையனோ சிறுவனாக இருந்தான். வெளியூர்களுக்குத் தனித்து அனுப்பக் கூடவில்லை. அதனால் அவ்வூர்த்திண்ணைப் பள்ளிக்கூடத்திலேயே சாமு (சாமிநாதனுடைய செல்லப் பெயர்) சேர்க்கப்பட்டான். சுப்பராய பிள்ளை தமது உறவினராதலால் சாமு விஷயத்தில் மற்றப் பிள்ளைகளுக்கு இல்லாத சில சுதந்திரங்கள் கிடைத்தன. திண்ணைப்பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளெல்லாரும் மாலையில் வீட்டுக்குப் போகுமுன்

அந்திக்குப் போறோம் நாங்கள்  
ஆற்றிலே விளையாடாமல்  
சிந்தையாய் விளக்கின் முன்பு  
சுவடியும் படித்துச் கட்டி......  
குந்தமாம் கோழி கூவக்  
கொப்பனே வாரோ மையா.

என்ற ஒரு பாட்டைப் பாடி விட்டுச் செல்வார். சாமுக்கு இப்பாட்டு பிடிப்பதில்லை. ஏன்? கோழி கூவுவதற்கு முன் எழுந்திருப்பது எப்படி? அவன் ஒரே பிள்ளை; அருமையாக வளர்க்கப்படுகிறான். காலையில் 7 மணிக்கு எழுந்திருப்பதே அவனுக்கு வெகு சீக்கிரமாகத் தோன்றும். துரைசாமி பிள்ளையும் மகனைக் காலையில் எழுப்ப விரும்பவில்லை. காலையில் எழுந்தால் பனியால் உபத்திரவம் ஏற்பட்டு விடுமாம். பையனது சுறுசுறுப்புக்குத் தகுந்தவாறே அவனது படிப்பும் இருந்தது. ஆனால் இது பற்றி உபாத்தியாயர் சுப்புராய பிள்ளை கவலை கொள்வதே கிடையாது. ஏன்? துரைசாமி பிள்ளை தம் மகனுடைய கல்வியைப்பற்றிக் கவலை வேண்டுவதில்லையென்ற பூரண சுதந்திரத்தையும் அவருக்குத் தந்திருக்கிறார்.

### ஆங்கிலப் படிப்பின் மோகம்

சாமிநாதனைக் கிராமக்கணக்கு வேலையில் அமர்த்த துரைசாமி பிள்ளைக்கு இஷ்டம் இல்லை. அவன் ஆங்கிலம் படித்துப் பெரிய உத்தியோகம் செய்ய வேண்டுமென்பதே அவரது எண்ணம். அதற்காகப் பையனுக்கு எட்டு வயதானதும் அத்திபுரத்திலிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள குப்பனூர் ஹைஸ்கூலில் அவன் சேர்க்கப்பட்டான். 'இளமையிற் பழக்கம் சுடுகாடுமட்டும்' என்ற பழமொழிப்படி பையனுக்குத் திண்ணைப் பள்ளிக்கூடத்துப் படிப்பாகவே யிருந்தது ஹைஸ்கூல் படிப்பும். மற்றப் பிள்ளைகளெல்லாரும் ஒருவகுப்பில் ஒரு வருஷம் படித்தால் சாமிநாதன் இரண்டுவருஷத்துக்குக் குறைந்து படியாத வகுப்பே கிடையாது. இது பற்றி துரைசாமி பிள்ளைக்குச் சந்தோஷமே! ஏன்? அஸ்திவாரம் உரமாக இருந்தாலன்றோ கட்டடம் பலமாக இருக்கும்! அதனால் ஒரு வருஷம் கஷ்டப்படுவதுபோல் இரண்டு வருஷம் கஷ்டப்பட்டால் அஸ்திவாரம் பலமாக இருக்குமன்றோ?

### திருமணம்

இப்படியாகத் தட்டிமுட்டித் தடுமாறி சாமிநாதன் நான்காவதுபாரம் வந்து சேர்ந்தான். வயதோ இருபத்திரண்டு ஆய்விட்டது. அத்திபுரத்திலுள்ள கிராமவாசிகள் சாமிநாதன் இங்கிலீஷ் படிப்பதாகவும், படிக்கும்போதே அவனுக்குக் கலெக்டர் உத்தியோகம் வந்துவிடுமென்றும் பேசிக்கொண்டார்கள். ஜனங்கள் இவ்வாறு பேசுவதைக் கண்டு துரைசாமி பிள்ளைக்கும் சந்தோஷமே. அவருக்கோ வயது அறுபதுக்குமேல் ஆய்விட்டது. எந்நேரத்தில் தென் திசைக்கடவுள் தம்மீது 'வாரண்ட்' பிறப்பித்து விடுவாரோ வென்ற பயம் அவரை வாட்டத் தொடங்கிற்று. அதனால் தாம் உயிரோடிருக்கும்போதே சாமிநாதனுக்கு ஒரு சுபகாரியத்தையும் செய்து விடவேண்டு மென்று எண்ணினர்.

துரைசாமி பிள்ளையின் சகோதரி நாகம்மாள். அந்த அம்மாளுக்கு ஒரே ஒரு புத்திரி; கனகவல்லி. கனகவல்லிக்கும் சாமிநாதனுக்கும். திருமணம் சித்திரை மாதம் 12-ம் தேதி செல்வர் வீட்டுக் கலியாணம்போன்று சிறப்பாக நடைபெற்றது. பிரமசரியத்தோடு கல்வியும் முடிவடைந்துவிட்டது.

### வேலையில்லாமை

சாமிநாதன் பள்ளிக்கூடத்தை விட்டான். பி. ஏ., படித்தவர்களுக்கே வேலை கிடைக்காத இந்நாளில் சாமிநாதனுக்குக் கலெக்டர் வேலை எங்கிருந்து கிடைக்கப்போகிறது? பெரிய எண்ணங்கொண்டிருந்த அவ்வூரார் ஏமாற்றமடைந்தனர். சாமிநாதன் எவ்வித வேலையுமற்றுச் சோம்பேறியாகத் திரிந்து வந்தான். சிறிது ஆங்கிலங் கற்ற அவனைப் பெரிய ஆங்கில வித்வானாக நினைத்துக்கொண்டிருந்தார்கள் அவ்வூர் மக்கள். ஆங்கிலம் படித்த தம் மகனுக்கு கிராமக்கணக்குவேலை மிகக்கேவலமான வேலை என்று எண்ணித் துரைசாமி பிள்ளை தம் தம்பியின் மகனிடத்து இருநூறு ரூபாய் வாங்கிக்கொண்டார்; தமக்குப் பின் கிராமக் கணக்கு வேலையை ஏற்று நடத்தவேண்டிய உரிமையாளர் தம் தம்பி மகனே என்றும் கலெக்டருக்கு அறிவித்துவிட்டார். இவ்வாறு நடந்ததெல்லாம் சாமிநாதனுடைய கலியாணத்துக்கு முன்.

### தகப்பனார் மரணம்

வேலையற்றிருந்த காலத்தும் தகப்பனாருக்கு உதவியாகக் கிராமக் கணக்குகளைப் பார்ப்பதுகூடக் கேவலமெனச் சாமிநாதன் நினைக்கத் தலைப்பட்டான். 'பட்ட காலிலே படும், கெட்ட குடியே கெடும்' என்ற பழமொழிபோல சாமிநாதனுடைய வேலையில்லாத் திண்டாட்ட காலத்தில் துரைசாமி பிள்ளையும் தென் திசை நோக்கிச்சென்றார். சாமிநாதன் என்செய்வான்? சாப்பாட்டுக்கே கஷ்டமாய்விட்டது. போதாக்குறைக்குக் கனகவல்லியும் அவன் தலையில் கட்டப்பட்டாள். இருவரும் சேர்ந்து கஷ்டப்பட்டனர்.

### உபாத்தியாயர்

துக்கசாகரத்தில் மூழ்கி எழுந்தபின் எத்தொழிலையும் திறம்படச்செய்தலே படித்தவரின் சிறப்பு என்பதைச் சாமிநாதன் அறிந்தான். அதனால் அவ்வூரில் புதிதாக ஏற்படுத்தப்பட்ட ஜில்லா போர்டு பள்ளிக்கூடத்தில் ஓர் உபாத்தியாயர் வேலைக்கு மனுப்போட்டான்; அதற்காகப் பல சிபார்சுகளையும் தேடினன். முடிவாகப்பக்கத்து ஊரிலுள்ள இராமகிருஷ்ண செட்டியாரின் உதவியால் அவனுக்கு அவ்வேலை கிடைத்தது. மாதச்சம்பளம் ரூபாய் பதினன்கு. இப்பதினன்கு ரூபாயைக் கொண்டு சாமிநாதனும் கனகவல்லியும் குடும்பத்தை இன்பமாக நடத்தி வந்தார்கள்.

இரண்டு ஆண்டுகள் கழிந்த பின்னர் சாமிநாதன் 'டிரெயினிங்' ஸ்கூலுக்குப் போய்வந்தான். அப்பரீட்சையில் 'பாஸ்' பண்ணிவிட்டான். அதனால் மறுபடியும் அவன் அத்திபுரத்திலேயே நிரந்தர உபாத்தியாயராக அமர்த்தப்பட்டான். இப்போது கிடைக்கும் சம்பளம் ரூபாய் இருபது. தகப்பனாருடைய மதிப்பால் சாமிநாதனை அவ்வூர்வாசிகள் மிகக்கௌரமாக மதித்தார்கள். பிற்காலத்தில் துரைசாமி பிள்ளையிடம் கொண்டிருந்த மதிப்புக்கு அதிகமாகவே சாமிநாதனிடம் அவ்வூர்வாசிகள் மதிப்புக்காட்டினார்கள். அதற்கிணங்கச் சாமிநாதனும் அவ்வூர் வாசிகளுக்குப் பல விதங்களிலும் உதவி புரிந்து வந்தான்.

### யோசனை கூறல்

வருஷங்கள் பல கடந்தன. அவ்வூர் வாசிகளில் சிலர் சாமிநாத பிள்ளையிடம் சென்று தம் பிள்ளைகளை எப்படிப் படிக்கவைக்கலாம் என்று கேட்பர். அப்போது சாமிநாத பிள்ளை இளமை அனுபவத்தைக் கொண்டு "ஐயா, ஆங்கிலம் என்ற மோகத்தில் பையனைக் கெடுத்து விடாதீர்கள். தற்காலத்து நம் இளம் பிள்ளைகளைக் கெடுத்து விடுவது ஆங்கிலப் படிப்பு. என் தகப்பனார் ஆங்கிலப் படிப்பில் ஆசை கொண்டதால் நான் பட்ட அவஸ்தை உங்களுக்குத் தெரியாததா? தெரிந்திருந்தும் அவ்வழியில் செல்லாதீர். நம் நாட்டு இயல்புக்கேற்ற வகையில் பிள்ளைகளைப் படிக்க வையுங்கள். தொழிலைச் சிறப்பான வகையில் நடத்துதற்கு வேண்டிய படிப்பே தற்காலத்துக்குத் தேவை. அதை விட்டு வேறு எண்ணங் கொள்ளாதீர்கள். படிப்போடு கடவுள் உண்மையும் மாணவர்களுக்கு உண்டாதல்வேண்டும். இவையெல்லாம் இருந்தாலும் போதா. உடல் நலனைக் கவனித்தலும் அவசியமாகும். இதற்காகப் பணம் செலவு செய்ய வேண்டுவதில்லை. நூதனமான கிரிக்கட், கால்பந்து முதலியவைகளை ஆடினாலேயே உடல் உரம்பெறும் என்ற மூடக் கொள்கையை விட்டு விடுங்கள். 'பளிச்சப்பளான்', 'உப்புகந்தம்' முதலிய நம் கிராமத்து விளையாட்டுக்களையே விளையாடப் பழக்குங்கள். இதனால் செலவும் கிடையாது. அடையும் நன்மைகளும் பல. இந்தியாவின் இவ்வற்புத விளையாட்டுகளை இப்போதே மேற்கு நாட்டார் உணர்ந்திருக்கிறார்; இவ்வழியில் தம் கவனத்தைச் செலுத்தவும் முற்பட்டிருக்கிறார். அப்படிப்பட்ட தறுவாயில் நாம் ஏன் நம் வீட்டிலுள்ள மாணிக்கத்தைக் கொடுத்துவிட்டு சாதாரண கற்களை வாங்கிக்கொள்ளுதல் வேண்டும்! இச்சாதாரண விளையாட்டுகளுக்குச் செலவழிக்கப்படும் பணம் எவ்வளவு! அதனால் எக்காரியமாயினும் முன் பின் ஆராயாது கண்மூடித் தனமாகச் செய்யாதீர்கள்" என்று யோசனை கூறுவார். சில வருஷங்களில் அக்கிராம வாசிகளுள் சாமிநாத பிள்ளையே தலைவராக விளங்கினர்.



வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு கஉ | தாதுஸு மார்கழிமீ உடுவ (8—1—1937) வெள்ளிக்கிழமை | பரல் நஉ

## இந்தியச் சர்வகலாசாலைத் துன்பங்கள்

(திரு. ஜே. விஜயதுங்கா)

### சர்வகலாசாலைகள்

இப்பொழுது இந்தியாவில் என்ன நடந்து கொண்டிருக்கிறது? 1913-ம் வருஷம் வரை தேசத்தின் பல பாகங்களிலும் சர்வகலாசாலைகள் ஏற்பட்டு வந்தன. இவை 1854-ம் வருஷத்தில் கோலப்பட்ட கல்வித் திட்டத்தையே குறிக்கோளாகக் கொண்டன. இதனால் இந்தியருக்குப் பட்டம் பெறுதற்குரிய கல்வி வழங்கப்படுகிறது. பட்டம்பெற்ற பிறகு இந்திய வாலிபர் அரசாங்கமாகிய இயந்திரத்தில் ஓர் அவயவமாகிறார்.

### தேசியக் கல்வி

இவ்வாறு நாளுக்கு நாள் பெருகும் எத்தனை பட்டதாரிகளை அரசாங்கம் திருப்தி செய்யும்? இது முடியாத காரியமல்லவா? அதனாலேயே வேலை யில்லாத் திண்டாட்டம் படித்த மாணவரை வாட்டத் தொடங்கிற்று. இதையறிந்த பெரியார் ஆரிய சமாஜ மூலமாகக் குருகுலங்கள் ஏற்படுத்தினர். இங்கு மாணவர் ஏழு வருஷங்கள் வரைப் படித்தல் வேண்டும். சமஸ்கிருதம், இந்து மதத்தைப்பற்றிய போதனைகள், பொதுவான ஆங்கிலம் முதலியன இக்குருகுலங்களில் போதிக்கப்படுகின்றன. தேகாப்பியாசமும் உடன் கவனிக்கப்படுகிறது. "இந்தியாவுக்குத் தேசியக் கல்வி" என்ற புத்தகத்தில் லஜபதி ராய் இவ்விஷயங்களைக் கூர்ந்து கவனித்திருக்கிறார்.

### காசி, இந்து சர்வகலாசாலை

காசியில் ஏற்பட்ட சென்ட்ரல் இந்து கல்லூரியே இக்குறைகளைப் போக்குவதற்கு முதல்வழி காட்டியாக நின்றது. இதுவே இப்போது காசி இந்து சர்வகலாசாலை என்று அழைக்கப்படுகிறது. இதுபோன்று தனித்த சர்வகலாசாலைகள் ஆறு இந்தியாவில் இருக்கின்றன.

### பரீட்சை சர்வகலாசாலைகள்

கல்கத்தா சர்வகலாசாலை இவற்றிலும் மாறுபட்டதாகும். இது சென்னைச்சர்வகலாசாலையைப் போன்று பல கல்லூரிகளை உள்ளடக்கி நிற்கும் ஒரு சர்வகலாசாலையாகும். இப்படிப்பட்ட சர்வகலாசாலைகளே இப்போது கல்வியில் ஏற்பட்டுள்ள கேவல நிலைமைக்குக் காரணமாவன. கல்கத்தா சர்வகலாசாலை 1857-ம் வருஷத்தில் காணப்பட்டது. இதுவே பட்டங்களை வழங்குவதற்காக இந்தியாவில் ஏற்பட்டமுதல் சர்வகலாசாலையாகும். இதில் ஐம்பது கல்லூரிகள் பிணைக்கப்பட்டிருக்கின்றன. 1917-ம் வருஷத்தில் நியமிக்கப்பட்ட சேட்லர் கமிஷனுக்குப் பிறகு டாக்கா சர்வகலாசாலை ஏற்பட்டது. இதுவே ஆஸாமிலும், கிழக்கு வங்காளத்திலும்முக்கியமான சர்வகலாசாலையாகும்.

### வியாபாரத்தைக் கவனிப்பதில்லை

சேட்லர் கமிஷன் சில குறைகளைக் கூறுகின்றது. அவையாவன :- மக்களுக்கு ஆரம்பக் கல்வி வழங்கப்படுவதில்லை. உயர் குலத்தோர் என்று கூறுவோர் விவசாயம், வியாபாரம், தொழில் முதலியவைகளில் நாட்டஞ் செலுத்துவது இல்லை. வங்காள ஏற்றுமதி வியாபாரம் முழுமையும் ஐரோப்பியர், ஆர்மீனியர், ஜப்பானியர் முதலிய அந்நியர் வசமே இருக்கிறது. வெளிநாடுகளிலிருந்து இந்தியாவில் குடியேறியவர்களிடமே நிலக்கரிச்சுரங்கம், சணல் தொழிற்சாலைகள் முதலியவைகள் சிக்கி நிற்கின்றன. இவைகளில் வேலைசெய்யும் தொழிலாளரும் வெளி மாகாணத்தவரே. தொழிற்சாலை நகரம் என்று கூறப்படும் கல்கத்தாவில் வங்காள மொழி பேசுவோர் நூற்றுக்கு நாற்பத்தொன்பது பேரே. இவ்வளவு இருந்தும் சர்வகலாசாலை மட்டும் வருஷந்தோறும் 2,000 பட்டதாரிகளைப் பிறப்பிக்கிறது!

### பட்ட மோகம்

சர்வ கலாசாலைகள் உண்மையான கல்வியைத் தர முயலுதல் வேண்டும். இன்றேல் பி. ஏ. பட்டத்தில் இந்தியருக்குப் பெரும் மோகத்தை உண்டாக்கவே சர்வகலாசாலைகள் இருக்கின்றன என்று எண்ணப்படும். கல்கத்தா தெருக்களில் தொங்க விடப்பட்டிருக்கும் பெயர்ப் பலகைகளில் குறிக்கப்பட்டிருக்கும் பட்டங்களைப் படிக்கவே ஓர் உற்சாகம்பிறக்கும். இவ்வாறான கல்விக்குரிய பட்டங்களைத் தவிர வேறுபல கழகங்களின் முதல் எழுத்துக்களைத் தங்கள் பெயரோடு சேர்த்துக் கொள்ளவும் இந்தியர் ஆசைப்படுகின்றனர். வங்காளக்கிளை 'ராயல் ஏஷியடிக் சொஸைடி'மெம்பர், 'ஓரியண்டல் கல்விஸ்தாபன' மெம்பர், 'தியசாபிகல் சொஸைடி' மெம்பர் என்பவைகளைக் குறிக்க எம். ஆர். ஏ. எஸ்., பி. பி., எம். ஓ. எஸ்., எஸ்., எப். டி. எஸ். என்னும் எழுத்துக்களைத் தம் பெயருக்குப் பின்னால் சேர்த்துக் கொள்ளுகின்றனர்.

### சீர்திருத்தக் கலாசாலைகள்

இவ்வாறான பட்ட மோகத்தைக் கண்ட ஸ்ரீமதி, பெஸண்ட் அம்மையார் கலை, விவசாயம், வியாபாரம் முதலியவைகளுக்காகப் பல தேசியக்கல்லூரிகளையும், தேசியச் சர்வகலாசாலைகளையும் உண்டாக்கினர். சிறிது காலத்துக்குப்பின்னர் அவை மறைந்தன. எஞ்சி நின்ற சில கல்லூரிகள் அவ்வம் மாகாணத்திலுள்ள சர்வகலாசாலைகளுடன் இணைக்கப்பட்டன.

இதன் அடிப்படையான காரணத்தை உணர்ந்த புலவர் பெருமான் - ரவீந்திரநாததாகூர்-சாந்தி நிகேதத்தையும் கிராமக் கல்வி அபிவிருத்திக்காக ஸ்ரீநிகேதம் என்ற மற்றொரு கழகத்தையும் ஏற்படுத்தினர். இங்கும் உயர் குடியிற் பிறந்தோர் கல்வியை மட்டும் பயிலத் தொடங்கினர். மற்றையோரே விவசாயத்துக்குச் சென்றனர்.

மகாத்மா காந்தியும் சில தேசியப்பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தியிருக்கிறார். இப்படிப்பட்ட பள்ளிக்கூடங்களே இந்தியாவுக்கு ஏற்றவை. ஆனால் தற்போது அவை சக்தியில்லாமல் இருக்கின்றன. சர்வகலாசாலைகளை மறைத்தற்குரிய சக்தி அவைகளுக்கு இன்னும் உண்டாகவில்லை.

### வெளிநாட்டில் இந்தியர்

இந்தியரின்பட்ட மோகம் அவர்களை இங்கிலாந்து சென்றும் பட்டம் பெறச் செய்கிறது. வருஷந்தோறும் சுமார் 1500 இந்திய மாணவர் பட்டம்பெற இங்கிலாந்து செல்கிறார். இவ்வாண்டு ஜனவரிமாதத்தில் வெளியிடப்பட்ட இந்திய ஹைகமிஷனர் கணக்குப்படி இங்கிலாந்திலுள்ள இந்தியமாணவர் எண்ணிக்கை 1300. இதில் 75 பேர் பெண்கள். இதில் வைத்தியப்பட்டத்துக்காக 372 பேரும், சட்டம் கலை முதலியவற்றிற்காக 324 பேரும், என்ஜினியர் பட்டத்துக்காக 257 பேரும், பொருளாதாரப் படிப்புக்காக 110 பேரும், விவசாயத்துக்காக 49 பேரும் இருக்கிறார். மற்றையோர் வேறு சில பட்டங்களுக்காகப் படிக்கிறார்.

இவ்வறிக்கையில் ஹைகமிஷனரின் அமைச்சர் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்.

"இவ்வாறு வெளித்தேசங்களுக்கு வருவதைவிட அவரவர் நாட்டிலேயே அவர் இருப்பது நலம். இதை நான் வருடந்தோறும் கூறி வருகிறேன். இதுவே எனக்கு வெறுப்பைத் தருகிறது"

### வேண்டிய கல்வி

இந்தியாவைப் போன்ற ஒரு பெரிய தேசத்தில் தேசியக் கல்வியைக் கற்பதே சிறப்பைத் தருவதாகும். இது சட்ட மூலமாக நிறுவப்படுதல் அவசியமாகும். தற்போது காந்தி அடிகளின் போதனையைக் கடைப்பிடித்தல் சிறப்பு. எவ்விதப் பட்டத்தையும், பெருமையையும் எதிர்பாராது படித்த மாணவர் கைத்தொழிலில் ஈடுபட வேண்டுமென்று அவர் கூறுகிறார். தற்போது பம்பாய் மாகாணத்திலும், பரோடா சமஸ்தானத்திலுமுள்ளதுபோலக் கட்டாய ஆரம்பக் கல்வி திட்டத்தை வகுத்து இந்தியாவினின்றும் படிப்பின்மையை ஓட்டிவிடுதல் அவசியமாகும். இந்தியாவில் சிலரே அதிகமாகப் படிக்கிறார். இவரின் பி. ஏ., பி. டி. முதலிய பட்டங்களின் மோகம் ஒழியும் நாளே இந்தியாவின் புனித நாளாகும்.

—கிரேட் பிரிட்டன் அண்டு தி ஈஸ்ட்.

## (அரசாங்கத்துக்குப் பத்திரங்கள்)

அரசாங்கத்துக்குப் பத்திரங்கள்முத்திரைகள் முதலிய விற்பனையால் எவ்வளவு வருமானம் என்பது எனக்குத் தெரியாது. கோர்ட்டுகளையும், சர்வகலாசாலைகளையும் ஏற்படுத்தியதால் அரசாங்கம் இந்திய மூளைக்குப் பெருத்த வேலையைக் கொடுத்திருக்கிறது. படித்தவர் என்றுபோல் வருஷந்தோறும் கல்கத்தா சர்வகலாசாலையிலிருந்து 2000 பேரும் மற்றப் பதினேழு சர்வகலாசாலைகளிலிருந்து எண்ணிறந்தோருமாகப் பட்டதாரிகள் பெருகுகிறார்கள். இப்பதினெட்டுச்சர்வகலாசாலைகளிலும் ஓர் இலட்சத்துக்குமேற்பட்ட மாணவர் தம் நாட்டுச் சகோதரருக்கும் பி. ஏ. என்னும் இரண்டெழுத்துப் பட்டங்களை வாங்கிக் கொடுப்பதற்காக உழைக்கிறார்.

### பட்டதாரிகளின் அலைச்சல்

பி. ஏ. பட்டம் பெற்ற பிறகு கைத்தொழில்களைச் செய்வது. தாழ்மையானதென்று பட்டதாரிகள் நினைக்கிறார்கள்; அதனால் 'குமாஸ்தா' வேலைக்கே லாயக்காகிறார்கள்; படித்த அனைவருக்கும் எவ்வாறு எழுதும் வேலையே கொடுத்தல் சாத்தியமாகும். அதனால் பட்டதாரிகளில் பலர் வேலையில்லாமல் தெருத்தெருவாக அலைகிறார். இவ்வாறு மாதங்கள் கணக்கிலும் சில சமயங்களில் வருஷங்கள் பலவும் கழிகின்றன.

### பி. ஏ. படிப்பு

எனக்குத் தெரிந்த பி. ஏ. படித்த ஒருவர் கைத்தொழில் செய்ய வெறுக்கிறார். அவருடைய மூளையின் சக்தியோ விபரீதமானது. இம்மூளைப் பட்டங்களைப் பெறுவதிலேயே நாட்டஞ் செலுத்துகிறது. இந்தியச் சர்வகலாசாலைகளுக்கெனவே ஷேக்ஸ்பியர் புலவரின் ஆங்கில நாடகங்களை இந்தியப் பதிப்பாகத் திரு. வெரிட்டி அவர்கள் வெளியிட்டிருக்கிறார்கள். இந்திய மாணவர் ஆங்கிலப் புலவரின் நாடகக் காவியத்தைப் படிப்பதில்லை. அவருடைய முழுமனமும் திரு. வெரிட்டி எழுதிய குறிப்புரைகள் மீதே செல்கிறது. ஆங்கிலப் பண்டிதர்களும் ஷேக்ஸ்பியரைப் பற்றிக் கற்பிப்பது இல்லை. போதனா முறைப் புத்தகத்தில் என்ன எழுதப்பட்டிருக்கிறதோ அதை மனப்பாடமாக அவர்கள் ஒப்புவித்து விடுவார்கள்.

அதனால் பாடமாக வைக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு புத்தகத்துக்கும் மாணவருக்காகக் குறிப்புரைகளும், பண்டிதர்களுக்காக போதனா முறைப் புத்தகங்களும் எழுதப்படுகின்றன. பாடபுத்தகங்களுக்காகவும், குறிப்புரைகளுக்காகவும் இந்தியாவில் செலவழிக்கப்படும் பணம் அளவு கடந்தது. இவ்வாறு இரண்டு வருஷங்கள் கஷ்டப்பட்டபிறகு இறுதியில் அடைவது பி. ஏ. என்ற வெகுமதியே. கலாசாலையுள்ள ஒவ்வொரு இந்திய நகரத்திலும் பொழுது விடியும்வரை மாளிகைகளில், மேல்மாடியில் விளக்குகள் எரிவதைக் காணுதல் கூடும். இதுவே மாணவர் மனப்பாடமாக ஒப்பிக்கப் பயிலும் காட்சி. வாழ்க்கைக்குப் பயனற்ற படிப்புக்காகவே அவர்கள் இவ்வளவு கஷ்டப்படுகிறார்கள்.

# எதிரொலி

## அர்த்தமற்ற கூற்று

சென்ற சனிக்கிழமை நாகபுரிச் சர்வ கலாசாலைப் பட்டமளிப்பு விழாப் பிரசங்கம் மத்தியமாகாண கவர்னரால் செய்யப்பட்டது. உயர்தரப் படிப்புக்குத் தகுதியற்றவர்களைச் சர்வகலாசாலைப்படிப்புக்கு ஏற்றுக்கொள்வதே வேலையில்லாத் திண்டாட்டத்துக்குக் காரணம் என்று அவர் கூறினார். இது அர்த்தமற்ற கூற்று. தகுதியற்றவர்களைச் சேர்த்துக் கொள்வதால் பட்டதாரிகள் திறமை குன்றுகிறது என்று சொன்னால் அதில் சிறிது பொருள் இருக்கிறது எனலாம். இதற்குத் தக்க பரிகாரம் என்ன? கைத்தொழில்களைப் பெருக்குவதே; கல்வி முன்னேற்றத்தைத் தடுப்பதன்று.

கைத்தொழில்களைப் பெருக்காதகுற்றம் அரசாங்கத்தவரிட மிருக்க, பட்டதாரிகளையும், படித்தவர்களையும் குறை கூறுவது அழகன்று.

—"பாம்பே கிரானிகல்"

## நமக்குத் திறமையில்லையா ?

இந்தியராகிய நாம் உழைப்பதற்கு மாத்திரமா பிறந்தோம் ? எத்தனை நாளைக்கு நாம் சாதனப் பொருள்களைப் பிற நாட்டவருக்கு அள்ளிக் கொடுத்துக் கொண்டிருப்பது? ஐரோப்பிய நிபுணர்களுக்குள்ள கைத் திறமை நமக்கில்லையா ? உலகிலிருக்கிற அறிஞர்களுக்குள்ள மூளை நம் நாட்டவருக்கில்லையா ? உண்டு என்பதை நிரூபிக்கச் சந்தர்ப்பம் கிடைத்து விட்டது. ஜப்பான் தனக்கு வேண்டிய கரியிரும்பை இந்தியாவிலிருந்தே வாங்கிக் கொள்வதாக ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறது. இதனால் பசியால் வாடும் ஆயிரக்கணக்கான ஏழை மக்கள் அரை வயிற்றுக் கஞ்சி பெறுவார்கள்.

தற்காலம்இரும்புத்தொழிலேமுதன்மையானதாகும். நம் நாட்டில் உயர்ந்த எஃகுச் சாமான்களை உற்பத்தி செய்ய 'டாடா இரும்புத் தொழிற்சாலை' போன்ற ஸ்தாபனங்கள் இருக்கின்றன. ஜப்பான் நம் நாட்டிலிருந்து கரியிரும்பை வாங்கிக் கொள்வதோடு அமையாது நாம் உற்பத்தி செய்யும் எஃகுப் பொருள்களில் ஒரு பகுதியையும் பெற்றுக்கொள்ள இசைந்திருந்தால் மிகவும் சந்தோஷமாயிருந்திருக்கும். இந்தக் காரியத்துக்காக நாம் ஏன் ஒரு பிரதியுபகாரம் செய்யக்கூடாது? நாம் உற்பத்தி செய்யாமல் பிற நாட்டிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டியிருக்கும் சாமான்களை நாம் ஏன் ஜப்பானிடமிருந்தே வாங்கிக் கொள்ளக் கூடாது ?

—"தி பார்வேர்ட்"

## மக்கள் மருந்தின்றி மடிவதேன் ?

சுதந்திர நாடுகளில் குழந்தைகள் விஷயத்தில் கவனம் செலுத்தப்படுகிறது. அதனால் தேசத்தின் எதிர்காலப் பிரஜைகள் அரோக திடகாத்திரராய் வாழ்க்கைப்போரை எதிர்க்கும் சக்தியுடையவர்களாய் இருப்பார்களென்று கருதப்படுகிறது. ஜெர்மெனியில் தேகாரோக்கிய விஷயமாக அதிக சிரத்தை கொள்ளப்படுகிறது. அம்முறையைப்பிரிட்டனிலும் அனுஷ்டிக்கப் பிரிட்டிஷார் கருதுகிறார். பிரிட்டிஷ் குழந்தைகளும், இளைஞர்களும் பலசாலிகளாயிருக்க வேண்டுமென்பதே அதன் நோக்கம். இவ்விதம் சுதந்திர நாடுகள் முயல்கின்றன; வியாதிகளை ஒழிக்கின்றன; மரண விகிதத்தைக் குறைக்கின்றன.

ஆனால் இந்தியாவில் நடப்பது வேறு விஷயம். குறைவற்ற சாதனப்பொருள்களும், நுண்ணிய மதியும், நாகரிக மேம்பாடும் பொருந்தியதோர் அரசாங்கத்தை நாம் பெற்றிருக்கிறோம். மக்கள் நோயால் வருந்துவது ஏன்? நாளுக்கு நாள் மக்கள் புல்தடுக்கினலும் விழக்கூடியவர்களாய், பலங்குன்றியவர்களாவதேன்? சிசுமரணவிகிதம் வளர்வதேன்? பள்ளிப்பிள்ளைகளின் சுகாதார விஷயத்தில் அபிவிருத்தி செய்யத் தக்க கவனம் கொள்ளாததேன்? இளைஞர் தேகாப்பியாசவிஷயத்தில் கட்டாய திட்டம் இல்லாததேன்? கிராமங்களிலே மருந்துக்கு வழியின்றி வருஷந்தோறும் லக்ஷக்கணக்கான மக்கள் மடிவதேன்? கல்வியறிவுள்ளவர்கள் இது விஷயத்தில் கிளர்ச்சி செய்யலாம். ஆனால் பலன் ஒன்றுமிராது.

ஏனெனில் நம்மைவிட மக்கள் விஷயத்தில் கவனத்தைச் சிறிது மட்டாகச் செலுத்தும் அரசாங்கத்தை நாம் பெற்றிருக்கிறோம். சேனை விஷயத்திலும், போலீஸ் பந்தோபஸ்திலும், அரசாங்கம் அதிகக் கவனம் செலுத்தும்; கல்விக்காகவும் சுகாதாரத்துக்காகவும் கருத்துச் செலுத்துமாறு வேண்டினல் அப்பொழுது 'பணம் இல்லை' யென்று மூக்கால் அழும்.

—"அமிர்த பஜார்"

## வேஷ்டி கட்டிக்கொள்ள வற்புறுத்து

சர்வகலாசாலை உத்தியோகஸ்தர்களும் பட்டதாரிகளும் வேஷ்டி கட்டிக் கொள்வதையே உத்தியோக உடையாகக் கல்கத்தா சர்வகலாசாலையார் அங்கீகரித் திருக்கிறார். வேஷ்டி கட்டிக்கொண்டு பஞ்சாபியைப் போல் ஒரு நீண்ட வெள்ளை 'ஜிப்பா'வோ, கறுப்புக் 'கோட்'டோ அணிந்துகொள்ள வேண்டுமென்று கல்கத்தா சர்வகலாசாலையார் தீர்மானித்திருக்கிறார். கறுப்புக்'கோட்' ஐரோப்பிய உடை என்று கருதப்படுகிறது. ஆனால் சர்வகலாசாலையார் கறுப்புக் 'கோட்' தரிக்கவேண்டுமென்றுகுறித்த காரணம் என்ன? வெள்ளை 'கோட்' ஹோட்டல் வேலைக்காரர்களும், பட்லர்களுமே அணிந்து கொள்வார்கள் என்ற மனப்பான்மையே!நாகபுரியார் வெள்ளை 'ஹாட்'டைக் கண்டு வெறுக்கிறார். அது ரயில்வே கார்டுகளுக்கும் டிக்கட் பரிசோதகர்களுக்குமேஉரியனவென்று கருதப்படுகிறது. ஆனால் லார்டு வில்லிங்டனுக்கு வெள்ளை 'ஹாட்' மீது மோகமதிகம். அவர் அதையே தரித்துக் கொள்கிறார். வெள்ளை வேஷ்டியும், கறுப்புக் 'கோட்'டும் தரித்துக் கொள்வதில் சிலர்க்கு வெறுப்பிருக்கலாம். ஆனால் அதே உடை தேசிய உடையாகக் கருதப்படும் நாள் சமீபத்தில் வரலாம். பதினைந்து வருஷங்களுக்கு முன், ஜெர்மானிய 'நாஜி' கட்சி தோன்றிஇன்றுஉலகினைக் கலக்குமென்று யார் எதிர்பார்த்தனர்?

—'ஹிதவாதா'

## அபேதவாதம் நிலைக்காது

எவ்வளவு தூரம் தீவிரப் பிரசாரம் செய்தாலும் அபேதவாதம் என்ற பயிர் இந்திய மண்ணில் வேர் கொள்ளாது. ஆரம்பத்தில் அதன் புதுமையைக் கண்டுசிலர் மோகங்கொள்ளலாம். ஆனால் நாளடைவில் அதன் தீமை தெரியும். எல்லாருடைய பொது நன்மைக்கும்-ஒவ்வொருவரின் நலத்துக்கும் - தக்க விதமாக நம் இந்திய சமுதாயம் அமைக்கப்பட்டிருக்கிறது. அம் முறையை அபேதவாதம் நிலை குலையச் செய்துவிடும். முதலாளித்துவத்தை அடியோடு ஒழித்தாலேயே அபேதத்தைப் புகுத்த முடியும். அஹிம்சையாலும், சத்தியத்தாலும் நமது எதிரிகளையும் வசப்படுத்தக்கூடும் என்பதை மகாத்மா காந்தி நமக்கு விளக்கியிருக்கிறார். அம் முறையால் நாம் சுகம்பெற வாழலாம். ஆகவே காந்தியத்தைப் பரப்ப முயல்வது நன்று.

—"ஹிந்துஸ்தான் டைம்ஸ்"

## பஞ்சாயத்து முறை

ஒரு வேலைக்காரிக்கு 40 ரூபாய் கடனிருந்தது. அதுபற்றிக் கல்கத்தா ஹைகோர்ட்டில் வழக்குத் தொடரப்பட்டது. நியாயம் பெறுவதற்குள் அத்தொகை பெருகி விட்டது. அந்த வழக்கின் தீர்ப்புக்கூறுகையில், நியாயம்பெறுவதற்குள் துரதிர்ஷ்ட வசமாகத் தொகை பெருகி விடுவதாக நீதிபதி குறிப்பிட்டார். நியாயம் பெறுவதில் உள்ள சிக்கலான முறையே அத்தொகையின் பெருக்குக்குக் காரணம்.

முன் நாட்களில் ஸ்தல பஞ்சாயத்துகளின் மூலம் வழக்குகள் விசாரிக்கப்பட்டன. அம்முறையில் வழக்குகள் விரிவாகவும், சீக்கிரமாகவும், அதிகச் செலவில்லாமலும், நியாயமாகவும் விசாரிக்கப்பட்டன. அம்முறையை மறுபடியும் அனுஷ்டிப்பது முடியாத காரியமா? வழக்குத் தொடர்வோரின் பொருள் காலியாகும்வரை வழக்கை நீடிக்காமல் சுலபமான - நேர்மையான - முறையில் நியாயம் வழங்கப்படும் முறையை அனுஷ்டிப்பது முடியாத காரியமா?

—"அட்வான்ஸ்"

## 80 வயதான மாணவர்கள் !

பிரிட்டனிலுள்ள இராப்பள்ளிக்கூடங்களில் பதினொரு லக்ஷம் மாணவர்கள் கல்வி பயில்கிறார்கள். இம்மாணவர்களின் வயது என்ன தெரியுமா? 12 வயதுச் சிறுவர்முதல் 80 வயதுக் கிழவர்வரை அப்பள்ளிக்கூடங்களில் படிக்கிறார்கள். பகல் நேரங்களில் தொழிற்சாலைகளில் வேலை செய்து இரவு நேரங்களில் இவர்கள் படிக்கிறார்கள். அப்பள்ளிக்கூடங்களில் சேர்ந்து படிக்க வயது நிர்ணயம் கிடையாது. அவரவர்கள் தங்களுக்கு இஷ்டமான விஷயங்களில் பயிற்சி பெறலாம்.













## கிராமபோனில் தேர்தல் பிரசாரம்

த. நா. காங்கரஸார் வேலை

தமிழ் நாட்டுக் காங்கரஸ் கமிட்டியார் தேர்தல் பிரசாரத்துக்காகக் கிராமபோன் ரிகார்டு வெளியிட்டிருக்கிறார். அதில் ஒருபுறம் திரு. சத்தியமூர்த்தியின் பேச்சும், மறுபுறம் முசிரி சுப்பிரமணிய அய்யரின் பாட்டும் இருக்கின்றன. இவ்விருவரும் காங்கரஸ் அபேட்சகருக்கே வாக்களிக்குமாறு வாக்காளரை வேண்டுகிறார். கொலம்பியா கம்பெனியார் அவற்றை ரிகார்டு செய்திருக்கிறார். ரிகார்டின் விலை இரண்டேகால் ரூபாய்.

## தலைவரின் தண்டனை

காங்கரஸிலிருந்து விலக்கினர்

கான்பூரைச் சேர்ந்த குரு ரகுவீர தயாளர் என்ற காங்கரஸ்காரர் காங்கரஸால் நியமிக்கப்பட்ட அபேட்சகரை எதிர்த்து நிற்பதால் காங்கரஸ் தலைவர், பண்டித ஜவஹர்லால், தமது விசேஷ அதிகாரத்தை உபயோகித்து அவர் அங்கம் வகிக்கும் காங்கரஸ் கமிட்டிகளினின்றும் அவரைவிலக்கி விட்டார். ஆரம்பக் காங்கரஸ் கமிட்டியில் அவர் அங்கம் வகிப்பதும் விலக்கப்படும். ஐக்கிய மாகாணக் காங்கரஸ் கமிட்டியார் ரகுவீரதயாளர் தம் செய்கைக்குக் காரணம் கூறச் சந்தர்ப்பம் அளித்திருக்கிறார்.

## ஜவஹர்லால் கலியாணம்?

சமதர்மக் கொள்கையுடைய பெண்

'பம்பாய் லெண்டினல்' பத்திரிகையின் அலகாபாத் நிருபர் அப்பத்திரிகைக்கு ஒரு செய்தி யனுப்பியிருக்கிறார். 'காங்கரஸ் மகா சபைத்தலைவர் ஜவஹர்லால் நேரு சமீபத்தில் ஒரு பெண்மணியை மணந்து கொள்வார். அப்பெண்மணி பி. ஏ. படித்தவர்; ஆமதாபாத் ஆலை முதலாளி ஒருவரின் பெண். மிகுந்த ஆச்சரியம் தருவது என்னவென்றால் அப் பெண்மணி சமதர்மக் கொள்கையுடையவர். சிவில் மணச் சட்டப்படி கலியாணம் நடைபெறும்' என்று அந்நிருபர் குறிப்பிட்டிருக்கிறார். இதுபற்றி அஸோஸியேடெட் பிரஸ் நிருபர் தலைவரைக் கண்டு கேட்ட பொழுது 'சுத்தப்பொய் அத்தகைய எண்ணமே எனக்கில்லை' என்று அவர் கூறிவிட்டார்.

## சைவ சித்தாந்த சமாஜ ஆண்டு விழா

சென்ற வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய கிழமைகளில் சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் ஆண்டு விழா காஞ்சிபுரத்தில் நடைபெற்றது. தூத்துக்குடி உயர் திருவாளர் சிவகுருநாத பிள்ளை அவர்கள் தலைமை வகித்தார்கள். அறிஞர் பலர் சொற்பொழி வாற்றினர். சமாஜத்தால் நடத்தப்பெறும் சைவத் தேர்வுகளில் வெற்றி பெற்றவர்க்கு 'இளஞ் சைவப் புலவர்' என்ற பட்டம் வழங்கப்பட்டது. சனிக்கிழமை சைவ இளைஞர் மகாநாடு நடைபெற்றது. திரு. பு. ஆலாலசுந்தரஞ்செட்டியார் தலைமை வகித்தார். இம்மகாநாடு சிறப்பான முறையில் நடைபெற்றமை போற்றத் தக்கதாகும்.

# கலம்பகம்

ஆந்திர நாட்டின் தேசபக்தர் டாக்டர் பி. சுப்பிரமணியம் இராஜமகேந்திரபுரத்தில் இறந்தார்.

o

வங்காள - நாகபுரி ரயில்வே தொழிலாளர் வேலைநிறுத்தம் அமைதியாகவே பெருகிக் கொண்டு வருகிறது.

o

ஹரிஜனக் கல்வி நிதிக்காக ஹைதராபாத் நைஸாம் மூன்று லக்ஷரூபா நன்கொடையாக அளித்திருக்கிறார்.

o

சேலம் ஜில்லா போர்டுக்குத் திரு. நாச்சியப்பக் கவுண்டர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட் டிருக்கிறார்.

o

இந்திய விஞ்ஞானச் சங்க இரண்டாவது மகாநாடு ஸர். ஸி. வி. ராமன் தலைமையில் இம்மாதம் 11-ந் தேதி பெங்களூரில் நடைபெறும்.

o

இலங்கையில் இந்தியர்களுக்கு விரோதமான மனப்பான்மை யில்லையென்று இலங்கைச் சமதர்மிகள் ஓர் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்கள்.

o

பஞ்சாப் மாகாணத்தில் தேர்தல் அபேட்சகராக நிற்கும் ராவ்சாகிப் கோபால்தாஸ் என்பவர் ஆகாய விமான மூலம் தேர்தல் துண்டுப் பிரசுரங்களை வழங்குகிறாராம்.

o

புதுச்சேரி கப்ளே ஆலை மறுபடியும் மூடப்பட்டுவிட்டது. இராமசாமி யென்ற மேஸ்திரியை வேலையை விட்டு நீக்கவேண்டுமென்று தொழிலாளர் வற்புறுத்தியதே காரணம்.

o

புலாபாய் தேசாய், பாபுராஜேந்திர பிரசாத், ஸ்ரீமதி சரோஜனி நாயுடு ஆகிய மூவரும் ஜனவரி மாத இறுதியில் தேர்தல்களை முன்னிட்டுத் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்வார்.

o

தஞ்சை ஜில்லா ஆசிரியர்-மானேஜர் மகாநாடு இவ்வாரம் கும்பகோணத்தில் நடைபெற்றது. திரு. ஆர். சுவாமிநாதய்யர் தலைமை வகித்தார். ஆரம்பக் கல்விபற்றிய பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

o

12 வயது முஸ்லிம் பையனுக்கும் 9 வயதுப் பெண்ணுக்கும் விவாகம் நடந்தது பற்றி சாரதா சட்டப்படி போக்ரா மாஜிஸ்திரேட் அறுவருக்கு ஒருவாரத் தண்டனையும், ஒரு கிழவிக்கு இருபது ரூபா அபராதமும் விதித்தார்.

o

கும்பகோணத்தில் ஆதித் திராவிடக் கிறிஸ்தவர்மகாநாடு ஒன்று சென்ற வாரம் நடைபெற்றது. கத்தோலிக்கர் மாதா கோயிலில் ஜாதி வித்தியாசம் பாராட்டுவதை ஆட்சேபித்துத் தீர்மானங்கள் நிறை வேற்றப்பட்டன.

o

திருநெல்வேலி ஜில்லாபோர்டு இரண்டாகப் பிரிக்கப்பட்டது. திருநெல்வேலி கலெக்டர் தென்ஜில்லா போர்டின் நிர்வாகத்தை ஏற்றுக்கொண்டார். தலைவர் தேர்தலுக்காக இத் தென்ஜில்லா போர்டு அங்கத்தவர்கூட்டம் இம்மாதம் 25-ந் தேதி நடைபெறும்.

o

இந்தியச் சட்டசபைக் காங்கரஸ் அங்கத்தினர்கள் பிப்ரவரி மாதம் 23-ந் தேதி சட்ட சபையில் கூடுதல் வேண்டுமென்ற சுற்றறிக்கை, காரியதரிசியால் அனுப்பப்பட் டிருக்கிறது. இதற்குள் மாகாணச் சட்டசபைகள் தேர்தல் முடிந்துவிடும்.

o

சேலம் ஜில்லாவிலிருந்து தனி ஜில்லாவாகப் பிரிக்கப்பட்ட தர்மபுரிஜில்லா போர்டு தலைவர் தேர்தல் சென்ற செவ்வாய்க்கிழமை நடைபெற்றது. திரு. கிருஷ்ணமூர்த்தி 15 ஓட்டுகளால் வெற்றிபெற்றார். காங்கரஸ் அபேட்சகர் திரு. நடேச செட்டியார் 14 ஓட்டுகளே பெற்றார்.

o

திரு. ரூய்க்கர் நாகபுரி தொழிற் சங்கத்தால் மத்தியமாகாண சட்டசபைக்கு அபேட்சகராக நியமிக்கப் பட்டிருக்கிறார். இம்மாத இறுதியில் அவர் விடுதலை பெறுவார். ஆனல் அபேட்சகர் நியமனதினம் அவர் விடுதலைக்குச் சிலதினங்கள் முன்வருவதால் அவரை முன்னதாகவே விடுவிக்க வேண்டுமென்று சமதர்மக்கட்சிக் காரியதரிசி வேண்டுகிறார்.

o

அமெரிக்கக் காங்கரஸ் கூட்டம் வாஷிங்டன் நகரில் நடைபெற்றது. ஸ்பெயினுக்கு எவ்வித யுத்த தளவாடங்களும் அனுப்புதல் கூடாதெனத் தீர்மானிக்கப்பட்டது. இத்தீர்மானம் அமுலுக்கு வருவதன் முன்னர் 'லைசென்ஸ்' பெறப்பட்ட 45 லட்சம் டாலர் பெறுமானமுள்ள யுத்த தளவாடங்கள் வெகு துரிதமாக ஸ்பெயினுக்கு அனுப்பப்பட்டன.

o

கண்கள் குருடாவதைத் தடுப்பதற்காக ஏற்பட்டுள்ள சங்கத்தின் வருஷாந்தக் கூட்டம் சென்ற செவ்வாய்க் கிழமை நடைபெற்றது. இந்தியாவில் ஆறு லக்ஷம் குருடர் இருப்பதாகவும், அவர்களில் நாலேந்து லக்ஷம் பேர் காலாகாலத்தில் சிகிச்சைசெய்துகொண்டிருந்தால் குருட்டுத்தனத்தை நீக்கியிருக்கலாமென்றும் லெப்டினண்டு கர்னல் கிர்வான் என்ற டாக்டர் கூறினார்.

o

வரப்போகும் பொதுத் தேர்தல்களுக்குத் தமிழ் நாட்டில் அபேட்சகர்களாக நிற்கும் காங்கரஸ்காரில் எண்மர் அரசியல் குற்றத்துக்காக 2வருஷத்துக்குக் குறையாத தண்டனை பெற்றிருப்பதால்அத்தடையை நீக்குமாறுஅவர்கள் அரசாங்கத்துக்கு விண்ணப்பித்துக் கொண்டிருக்கிறார்கள். திரு. சத்தியமூர்த்தி இதுவிஷயமாகப் பிரதமகாரியதரிசியைக் கண்டு பேசியிருக்கிறார்.

o

சேலம் ஜில்லாபோர்டு காங்கரஸ் அங்கத்தவர் கூட்டம் ஒன்று சென்றவாரம் திரு. இராமசாமி செட்டியார் தலைமையில் நடைபெற்றது. தமிழ்நாட்டிலுள்ள ஜில்லாபோர்டு காங்கரஸ் அங்கத்தவர் மகாநாடு ஒன்றைச்சேலத்தில் கூட்டுவதென்றும், காங்கரஸின் நிர்மாணத்திட்டத்தை ஏககாலத்தில் ஒவ்வொரு போர்டிலும் நுழைப்பதுபற்றி ஆலோசிப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டன.

o

சென்னை மாகாண நகரசபை ஊழியர் மகாநாடு சென்ற வாரம் கர்நூலில் நடைபெற்றது. நகரசபை வரி வசூலிப்போருக்கு ரூ 25—1—40 வீதம் சம்பளம் ஏற்படுத்த வேண்டுமென்றும், நகரசபை உயர்தரப்பள்ளி உபாத்தியாயர்களுக்கும் அரசாங்க உபாத்தியாயர்களைப்போன்றே சம்பளம் அளிக்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

o

தஞ்சையில் 'ராஜாராம் டாக்கீ'யில் காட்சி நடைபெற்றுக் கொண்டிருந்த பொழுது சிலர் கூச்சல்போட்டனராம். இதைச் சினிமா அதிகாரிகள் கண்டித்தார்கள். அதனல் கோபங் கொண்ட எதிரிகள் மறுநாள் சினிமா விளம்பரங்களை எடுத்துச் சென்றவர்களுடன் சச்சரவு செய்தார்கள். சினிமாக்காரர்கள் தங்கள் ஆட்களுடன் கலந்து கொள்ளவே சச்சரவு வலுத்தது. போலீஸார் 12 பேரைக் கைது செய்து அமைதி ஏற்படுத்தினர்.

o

தென் ஆற்காடு ஜில்லா போர்டு இம்மாதம் 12-ந் தேதி முதல் இரண்டாக்கப்படும். கடலூர் ஜில்லாபோர்டு என்றும் விழுப்புரம் ஜில்லா போர்டு என்றும் அவை பெயர்பெறும். கடலூர், சிதம்பரம், விருத்தாசலம் தாலுக்காக்கள், உளுந்தூர்ப் பேட்டை டிவிஷன் முதலியன கடலூர் ஜில்லாபோர்டு என்றும், திண்டிவனம், விழுப்புரம், செஞ்சி, கள்ளக்குறிச்சி, திருக்கோயிலூர் முதலியதாலுக்காக்கள் விழுப்புரம் ஜில்லா போர்டு என்றும்பெயர் பெறும்.

## பெண் ஆணாகிப் பெண்ணான விந்தை !

இளைஞர்மீது காதல்கொண்டாள்

லோபியா என்ற விடத்தில் போலில்கோ என்றொரு வாலிபன் இருக்கிறான். அவனுக்கு வயது இப்பொழுது 22. அவன் ஆறு வருஷங்களாகவே ஆணாயிருக்கிறான். அதற்கு முன்பு அவன் பெண்ணாயிருந்தான்.

போலில்கோவுக்குப் பதினறு வயதாயிருந்தபொழுது அவள் பள்ளிக்குச் செல்லும் பெண்ணாயிருந்தாள். ஒரு நாள் அவள் உடல் நோயால் வருந்தி அதைப் போக்கிக்கொள்ள டாக்டரிடம் சென்றாள். டாக்டர் அவளைப் பரிசோதித்துப் பார்த்தார். அவளுக்கு ஆண் அம்சங்கள் உண்டாவது கண்டு ஓர் ஆபரேஷன் செய்து அவர் அவளை ஆணாக்கினர். அதுமுதல் அவள் ஆணானாள். அவளுக்கு ஆணுக்குரிய சின்னங்கள் யாவும் தோன்றலாயின. ஆனல் ஆணாயிருந்த அவள் சமீபத்தில் மறுபடியும் பெண்ணானாள். ஆண் சின்னங்கள் மறைந்தன; பெண்குறிகள் தோன்றின. அத்துடன் நில்லாமல் அவள் ஓர் இளைஞன் மீதும் காதல் கொண்டாள்! இப்பொழுது அப்பெண்மணி மறுபடியும் ஆபரேஷன் செய்து கொள்ள விரும்புகிறாள். முன் ஆபரேஷன் செய்த டாக்டர் தவறு செய்து விட்டதாக அவர்மீது அவள் வழக்குத் தொடர்ந்திருக்கிறாள்.

## சர்க்கஸ் புலி பாய்ந்தது

பம்பாயில் சென்ற ஞாயிற்றுக்கிழமை ஒரு சர்க்கஸ் காட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. அப்பொழுது அங்கு வேடிக்கை செய்யக் கொண்டு வரப்பட்டிருந்த பத்து புலிகளில் ஒன்று மூர்க்கங்கொண்டு தன்னைப் பழக்குபவர் மீது பாய்ந்தது. அருகிலுள்ள வேலையாட்கள் உடனே ஓடிவந்து புலியைத் தன் கூண்டுக்குள் புகச் செய்தார்கள். நல்ல வேளையாக மற்றப் புலிகளும் அதனுடன் கலந்து கொள்ளவில்லை. புலியால் தாக்கப்பட்டவர் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டார்.

## மனைவியரைக் கவர்ந்த கள்வன்

மூன்றுமனைவியரை அபகரித்தான்

பாரிஸுக்கு அருகில் திரு. ஹான்வே என்று ஒருவர் வசிக்கிறார். அவர் ஓர் ஆங்கிலேயர்; சுமார் பத்து வருஷங்களுக்கு முன்பு தம் முதல் மனைவியுடன் பாரிஸுக்கு வந்தார். அவர்கள் குடியிருந்த இடத்துக்கு அருகில் ஒரு பிரெஞ்சுக்காரர் வசித்தார். அவர் இளைஞர்; பால் பிரீ என்ற பெயருடையவர். திரு. பால்பிரீக்கும் திரு. ஹான்வேயின் மனைவிக்கும் நட்புண்டாயிற்று. அது திரு. ஹான்வேக்குத் தெரிந்தது. உடனே அவர் விவாகரத்து வழக்குத் தொடர்ந்தார். அதன் பயனுல் திருமதி. ஹான்வே திருமதி. பால்பிரீயானர். திரு. பால்பிரீயும் அவரது மனைவியும் திரு. ஹான்வேயின் வாசஸ்தலத்துக்கு எதிரில் வசிக்கலாயினர். திரு. ஹான்வே மறுபடியும் ஒரு பிரெஞ்சுக்காரியை மணம் செய்து கொண்டார். அப் பெண்மணியும் திரு. பால்பிரீயிடம் மோகம் கொண்டார். மறுபடியும் விவாகரத்து வழக்குத் தொடரப்பட்டது. அப்பிரெஞ்சுமாது திரு. பால்பிரீயிடம் சேர்ந்து கொண்டாள். மூன்றுவது முறையாகத் திரு. ஹான்வே கலியாணம் செய்து கொண்டு சிலநாள் சந்தோஷமாயிருந்தார். ஆயினும் அந்த மூன்றுவது மனைவியும் பால்பிரீயிடம் நட்புக்கொண்டு விட்டாதாகச் சிலர் சொல்லக்கேட்ட ஹான்வே விவாகரத்து தொடர்ந்தார்.

திரு. ஹான்வே, திரு. பால்பிரீமீது நஷ்ட ஈடு வழக்குத் தொடர்ந்திருக்கிறார். நான்காம் முறையாகக் கலியாணஞ் செய்துகொள்ளத் திரு. ஹான்வே விரும்புகிறார். ஆனல் அவர் முன்பு வசித்தவிடத்தில் வசிக்கமாட்டார்.

# குளக்கரைப் பேச்சு

இரண்டு தினங்களுக்கு முன் ஒரு நாள் மாலை உபாத்தியாயர் சுப்புராயர் குளக்கரையில் உட்கார்ந்திருந்தார். அச் சமயம் இராமஸ்வாமி சாஸ்திரியார், உள்ளூர்க் கணக்கப்பிள்ளை, முதலியார் முதலியோர் குளக்கரைக்கு வந்தனர்.

"என்ன! சுப்புராயரே! கிறிஸ்த்மஸுக்குச் சென்னை சென்றிருந்தீரே! என்ன விசேஷம்? சொல்லும் பார்க்கலாம்" என்றார் சாஸ்தியார்.

"தலை வலிக்கிறதா?"

"அப்பா! அப்பா! அப்பா! அதை ஏன் கேட்கிறீர் சாஸ்திரியாரே! போன விடத்திலெல்லாம் விளம்பரப் பலகையில் முட்டிக்கொண்டேன். எங்கே சென்றாலும் சரி; 'உங்களுக்குத் தலை வலிக்கிறதா? கவலைப்படாதீர்கள்! இதோ தலைவலி மருந்து' என்ற விளம்பரம் காணப்பட்டது.

அது போகட்டும் என்று வேறு பக்கம் பார்த்தால் 'நீரிழிவால் அவஸ்தைப்படுவானேன்? வயிற்று வலியால் கஷ்டப்படுவானேன்? இதோ கை கண்ட மருந்து' என்ற விளம்பரம் கண்ணில் தெரிகிறது. 'குழந்தைகளுக்குக் சட்டியா? இதோ டாக்டர் அம்மாமியின் மருந்து' என்ற விளம்பரம் எங்குப் பார்த்தாலும் காட்சி யளித்தது. டிராமில் ஏறினாலோ 'அம்மாமி அப்பளாம்! ஸோயா பருப்பு! ஓவல்டின், ஸ்டார் பென்ஸில்' முதலிய விளம்பரங்கள் கண்ணை உறுத்தின. இந்த விளம்பரங்களைப் பார்த்துப் பார்த்துத் தலை வலி எடுத்தது. ஒரு தெரு வழியே சென்றேன். அங்கொரு மூலையில் ஒருவர் ஏதோ பிரசங்கம் செய்து கொண்டிருந்தார்.

'உங்கள் வீட்டுப் பெண்மணிகள் திடமற்றவர்களா யிருந்தால் கவலைப் படாதீர்கள்! இதோ சமய சஞ்சீவி போன்ற ஔஷதம்' என்று அவர் பெரிய தொனியில் சண்டமாருதம் போல் பிரசங்கமாரி பொழிந்துகொண்டிருந்தார். அட ராமா! எங்கே சென்றாலும் வியாதியைப்பற்றிய பேச்சாக விருக்கிறதே! என்று நினைத்துக்கொண்டு அப்பால் சென்றேன். அங்கே சில பையன்கள் விளம்பரத் தட்டிகளைக் கையிலேந்திப் பின் வருமாறு முறை வைத்துச் சொல்லிக்கொண்டு சென்றார்கள்.

'ஸர்வம் விளம்பர மயம் ஜகத்'

முதல் பையன்: என்ன ஆட்டம்!
மற்றவர்கள்: கொண்டாட்டம்
முதல் பையன்: என்ன தியேட்டர்?
மற்றவர்கள்: மோகன் தியேட்டர்
முதல் பையன்: எப்போ?
மற்றவர்கள்: நாளைக்கு

இவ்விஷயத்தை அவர்கள் திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டே சென்றார்கள். இந்தக் காட்சிகளைப் பாராது போக முடியாது. ஆகாயத்தில் தவிர மற்றவிடங்களில் எல்லாம் ஒரே விளம்பர மயமா யிருந்தது. 'ஸர்வம் ஈசுவர மயம் ஜகத்' என்று பெரியோர் சொல்வர். இப்பொழுது நாம் 'ஸர்வம் விளம்பர மயம் ஜகத்' என்று சொல்லிக் கொள்ளவேண்டியதே! நல்ல வேளையாக ஆகாயத்தில் ஒரு விளம்பரமும் இல்லை யென்று நினைத்தேன்! பின்னால் அது தவறு என்று தெரியவந்தது. ஏன் என்று கேளுங்கள்! ஆகாயம், மேகம், கிரகங்கள் முதலிய யாவும் ஈசுவரன் ஒருவன் உளன் என்பதற்குரிய விளம்பரங்கள் அல்லவா? இவ்விதம் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டே நான் பிராட்வேயில் நடந்து சென்றேன். அதற்குள் பல கார்கள் என் பின்னால் ஆயிரம் எருமைக் கடாக்கள் கத்துவதுபோல் சப்தமிட்டன. பின்னால் திரும்பி விட்டு முன்னால் பார்த்தால் டிராம் டிரைவர் ஏகாதச உருத்திரரும் ஒன்று சேர்ந்தாலொத்த கோபத்துடன் மணி யடித்தான். பக்கத்தில் 'ரிக்ஷா வாலா' ஒருவன் 'ஏய்' என்று ஓடிவந்தான். 'பிராட்வே' என்றால் 'அகல வழி' என்று அர்த்தம். ஆனால் சென்னையில் அதைப் போலக் குறுகலான சந்து வேறில்லை. அது நெருக்கமான வர்த்தக ஸ்தலம். மெதுவாக அதைத் தாண்டினேன். பழக் கடைக்குள் போகலாம் என்று நினைத்தேன். 'புரூட் மார்க்கட்' என்று அதற்குப் பெயர். ஆனால் அங்கே பழம் இருப்பதாக நான் தவறாகநினைத்தேன். அதன்முன் மூங்கில் தட்டிகள், கழிகள் கூடைகள் முதலியன காட்சி யளித்தன. இதற்கா பழக்கடை யென்று பெயர்? இது மூங்கிற் கடையல்லவா? என்று நினைத்தேன். உள்ளே சென்ற பிறகு பழம் இருப்பது தெரிய வந்தது.

"மட மட" வென்று 'அபிஷேகம்' ஆயிற்று"

அதோடு இல்லையே! காலை சுமார் பத்து மணியிருக்கும். ஒரு தெரு வழியே சென்றுகொண்டிருந்தேன். 'பொத்' தென்று ஏதோ என் மேல் விழ்ந்தது. திரும்பிப்பார்த்தால் சாப்பிட்ட எச்சில் இலையைத் தெருவில் 'லோகுஸாக' வீசி விட்டு ஒரு பெண்மணி 'விர்ரென்று' உள்ளே சென்று 'படீ' ரென்று கதவைத் தாளிட்டது தெரிய வந்தது. ஐயோ! இப்படியும் இருப்பார்களா? என்று நினைத்துக்கொண்டு ஒரு குறுகலான சந்து வழியே சென்றேன். 'மட மட' வென்று ஏதோ என் தலையில் 'அபிஷேகம்' ஆயிற்று. மூன்றாவது மாடி ஒன்றிலிருந்து ஒரு குழாய் வழியாகச் சாக்கடை ஜலம் அருவிபோல் விழ்ந்தது. சற்று எட்டி நின்று பார்த்துவிட்டுப் போனேன்.

போதுமப்பா! பட்டினச்சுகம்!

நல்ல வேளையாக அப்பொழுது நான் க்ஷவரம் செய்து கொண்டிருந்தேன். வீட்டிற்குப் போய்த்தான் ஸ்நானம் செய்யப்போகிறோமே என்று நினைத்துக் கொண்டே வீடு சென்றேன். பாதி ஸ்நானம் செய்துகொண்டிருக்கையில் குழாய் நின்று விட்டது. அதுமட்டுமன்று. முதல் நாள் இரவு சாப்பிடும்பொழுது எலக்ட்ரிக் விளக்கு நின்று விட்டது. போதுமப்பா! பட்டினத்துச் சுகம்! என்று எண்ணினேன். அன்று மாலை பீச்சுக்குப் போனேன். அங்கு என்ன பார்த்தேன் என்று நினைக்கிறீர்கள்! பிறந்த குழந்தை முதல் சாவதற்கு 'டிக்கட்' வாங்கி வைத்திருக்கும் பாட்டிவரை எல்லாரும் மூக்குக்கண்ணாடி அணிந்திருக்கக் கண்டேன். இதுவும் நவீன நாகரிகத்தின் கோலம்போலும் என்று நினைத்தேன். சுந்தரமூர்த்தி சுவாமி பகவானிடம் 'மூக்குக் கண்ணாடி தா' என்று கேட்டிருக்கிறாரே! என்று சிந்தை தெளிந்தேன்.

இவ்வளவே! நான் கண்ட அதிசயங்கள்" என்றார் சுப்புராயர்.

"அப்பா! மூச்சுவிடாமல் ஒரே பிடியாக ஒரு குட்டிப்பிரசங்கம் செய்து விட்டாரே! உபாத்தியாயர்!" என்று மூக்கின்மேல் விரலை வைத்து 'க்லக், க்லக்' என்று நாக்கால் சப்தம்செய்தார் முதலியார்.

'உங்களை முட்டாளாக்க'

"ஒரு விசேஷம் கேளும் சுப்புராயரே! பெய்ஸ்பூரில் காங்கரஸ் நடந்ததல்லவா? அப்பொழுது நடந்த சம்பவங்களிலிருந்து சிற்சில ஹாஸ்ய மணிகளைப் பொறுக்கி உங்களிடம் சொல்லவென்று வைத்திருந்தேன்! அந்த மணிகளை இன்னும் மாலையாகக் கோக்கவில்லை. ஒரே ஒரு விஷயம் மிகவும் 'தமாஷா' யிருக்கிறது. ஏப்ரல் மாதம் முதல் தேதியை 'ஆல் பூல்ஸ் டே' அதாவது 'சர்வ முட்டாள் தினம்' என்று ஆங்கிலேயர் சொல்வர். இவ்வருஷம் ஏப்ரல் மாதம் முதல்தேதி புது அரசியல் அமுலுக்கு வருகிறது. அன்று நாடெங்கும் ஹர்த்தால் நடைபெறவேண்டுமென்று சுவாமி சம்பூர்ணானந்தர் ஒரு தீர்மானங் கொண்டு வந்தார். அதன் மீது பேசுகையில் "சர்வ முட்டாள் தினத்தன்று ஏன் புது அரசியலை அமுலுக்குக் கொண்டு வருதல்வேண்டும்?" என்றார். 'உங்களை யெல்லாம் முட்டாள்களாக்கத்தான்' என்று ஜவஹர் அதற்குப் பதில் கூறினார்" என்று சாஸ்திரியார் சொன்னார்.

'மாரனுக்கு மற்றோர் முடி அர்ப்பணம்'

"எட்வர்டு மன்னர் காதலின் பொருட்டு முடிதுறந்தார். 'பிஷப்' புக்கள் அவரை வாயில் வந்தபடி திட்டுகிறார்கள். இதை எத்தனை நாள் மக்கள் பொறுப்பார்கள்? பால்டுவினின் சூழ்ச்சி எத்தனை நாளைக்குப் பலிக்கும்? எச். ஜி. வெல்ஸ் போன்ற அறிஞர்கள் இதைக் கண்டிக்க ஒரு சங்கம் ஆரம்பித்துள்ளார்கள். இந்த நிலையில் மற்றோர் மன்னர் முடி துறக்க விருக்கிறார். அவரே பெல்ஜியம் அரசரான லியோபால்டு. அவர் சென்ற வருஷம் சுவிட்ஜர்லந்துக்குச் சென்றார். அப்பொழுது அவர் சென்ற மோட்டார் கவிழ்ந்தது. மன்னரின் காதலி உயிர் நீத்தாள்.

மன்னர் அன்று முதல் இன்றுவரைக் தம் காதலியை நினைந்து உருகுகிறார்; எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணாகிறார்; முகம் வெளுத்து உடல் இளைத்துச் சதா கண்ணீரும் கம்பலையுமா யிருக்கிறார்; ஊண் உறக்கமின்றித் தவிக்கிறார்; தன்னந்தனியே காதலியின் சமாதி யருகில் மண்டியிட்டு ஏங்குகிறார். இம்மன்னருக்கு மறுவிவாகம் செய்ய மந்திரிமார் விரும்புகிறார். ஆஸ்திரிய இராஜ குடும்பத்துப் பெண் ஒருத்தியை விவாகம் செய்து வைக்க விரும்புவதாக வதந்தி. மாரன் கைக்கணைக்கு மன்னரென்றும், ஏழை யென்றும் வித்தியாசமுண்டோ? காதலிக்கு நெஞ்சைப் பறிகொடுத்த மன்னர் மறுமணம் செய்வ தெங்கே! தம் ஆறு வயது மகனுக்குப் பட்டங் கட்டிவிட்டு அவர் முடிதுறப்பாரென்று கூறப்படுகிறது. மாரனுக்கு மற்றோர் முடி அர்ப்பணம்" என்றார் சுப்புராயர்.

'காற்றிலேறி அவ்விண்ணையும் நாடுவோம்
காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே
நூற்றிரண்டு மலைகளைச் சாடுவோம் [லே.'
நுண்ணிடைப் பெண்ணொருத்தி பணியி

என்று முதலியார் பாடினார்.

"மகனுக்குப் பட்டங் கட்டி மன்னர் துறவு மேற்கொள்வதே சரி. பண்டை நாளில் நம் அரசர்கள் அவ்விதமே செய்தார்கள்" என்றுசாஸ்திரியார்சொன்னார்.

"பலே! பேஷ்" என்று முதலியார் ஆரவாரித்தார். பிறகு எல்லாரும் எழுந்து சென்றனர்.





# மணித்திரள்

ஐரோப்பாவில் பிரான்ஸுக்கே அதிகக் காலாட்படை உண்டு.

* * *

ஜப்பானியர் எலியைத்தின்கிறார். பிரெஞ்சுக்காரர் தவளையைத்தின்கிறார்.

* * *

பிரிட்டனில் தபால் இலாகாவில் 2,52,000 பேர் ஊழியம் செய்கிறார். ரயில்வேயில் 2,22,000 பேர் வேலை பார்க்கிறார்.

* * *

ஜெர்மெனியில் 50 நிமிஷம் சேர்ந்தாற்போல் பாடக்கூடிய கிராமபோன் 'பிளேட்டுகள்' கண்டு பிடிக்கப் பட்டிருக்கின்றன.

* * *

நியூ ஆர்லியன்ஸ் என்ற நகரில் ஒருவருக்குக் காதுக்குடைச்சல் ஏற்பட்டது. டாக்டரிடம் சென்றார். காதிலிருந்து ஒரு வெட்டுக்கிளி எடுக்கப்பட்டது.

* * *

பெண் குழந்தைகளை விட ஆண்குழந்தைகள் அதிகமாகப் பிறக்கும் காலம் கோடை, வசந்த காலங்களேயாகும் என்று அமெரிக்க நிபுணர்கள் கூறுகிறார்கள்.

* * *

பதினாயிரம் அடி உயரத்தில் ஆகாய விமானத்தில் பிரயாணம் செய்வோர் பூமியிலுள்ளவரை விடப்பத்து நிமிஷம் முன்னதாகவே சூரியோதயத்தைக் காண்கிறார்.

* * *

உலகில் ஆகாய விமானம் செல்லக் கூடிய தூரம்—அதாவது ஆகாயவிமானம் செல்ல ஏற்படுத்தப் பட்டிருக்கும் பாதை—3,00,000 மைல் என்று கணக்கிடப் பட்டுளது.

* * *

லண்டன் பளிங்குமாளிகை உலகிலேயே மிக அழகானது; சென்ற மாதம் முதலில் தீக்கிரையானது; லண்டனில் 15,00,000 பவுன் செலவில் 1854-ம் வருஷம் கட்டப்பட்டது.

* * *

பிளாகிடா என்ற ஊரில் ஓர் ஏரித் தண்ணீர் முழுவதும் வற்றிவிட்டது. காரணம் அந்த ஏரியிலுள்ள 200 அடிச் சதுரக் குழிக்குள் அந்த ஜலம் முழுவதும் சென்று விட்டமையே!

* * *

கால் அங்குல அளவுள்ள பாதரட்சையொன்றை லீஸ்டரில் ஒருவர் கண்டுபிடித்திருக்கிறார். உலகிலேயே மிக நுண்ணிய பாதரட்சை அது. அதைப்பூதக் கண்ணாடியாலேயே நன்கு பரீட்சிக்க முடியுமாம்.

* * *

ஆஸ்திரேலியாவில் கான் போரா என்ற நகரில் ஒன்பதாயிரம் மக்கள் வசிக்கிறார்கள். அந்த ஊரில் உள்ள கோர்ட்டுக்கு எத்தகைய வழக்கும் வரவில்லையாம். அந்த நகரம் ஏற்பட்டு ஒன்பது வருஷங்களாகின்றன.

* * *

பிரான்ஸில் ஒருவகைப் புதிய கண்ணாடி கண்டு பிடிக்கப்பட்டுளது. அக்கண்ணாடியைச் சுவரோடு வைத்து ஆணி அடிக்கலாம்; சிறு சிறு துண்டுகளாக அறுக்கலாம். அக்கண்ணாடியால் துன்பம் எதுவும் நேரிடாது.

* * *

ருஷ்யாவில் 3,100 ஆகாய விமானங்களும், பிரிட்டனில் 1,447 ஆகாய விமானங்களும், இதாலியில் 1350 விமானங்களும், பிரான்ஸில் ஆயிரம் விமானங்களு மிருக்கின்றன. இவை யாவும் யுத்த விமானங்கள்.

* * *

ஜெர்மெனியில் சென்ற வருஷம் 15 முதல் 16 வயதுக்குட்பட்ட பெண்கள் 63 பேர் கலியாணம் செய்து கொண்டனர்; 16 முதல் 17 வயதுக்குட்பட்டவர் 1,128 பேர் மணம்புரிந்து கொண்டனர்; 17 முதல் 18 வயதுக்குட்பட்டவர் 4,383 பேர் விவாகம் செய்து கொண்டனர்.

# உலகக் காட்சி

## பெரிய பிரிட்டிஷ் கப்பல்

இப்போது உலகத்திலுள்ள பெரிய கப்பல்களில் முதன்மையானது 'குயீன் மேரி' என்பது. இது பிரிட்டிஷாருக்குச் சொந்தமானது. இக்கப்பலின் தளப் பரப்பு இருபது ஏகர் விஸ்தீரண முள்ளது. இக்கப்பலுக் குள்ளேயே கால் பந்து ஆடக்கூடிய போதிய வசதிகள் இருக்கின்றனவாம். இக்கப்பலில் நாய்கள் இருத்தற்குரிய இருபத்தாறு கூண்டுகள் இருக்கின்றன.

காலத்தை அறிவிக்கும் 596 கடிகாரங்கள் இருக்கின்றன. வெளி சமாச்சாரங்களைக் கவனிக்க மட்டும் ரேடியோ ஸ்தலத்தில் பதினான்கு பேர் வேலை செய்கிறார். பிரயாணிகளுக்கு வேண்டிய வசதிகள் பல இக்கப்பலில் இருக்கின்றன.

* * *

## புதிய உணர்ச்சி

அமெரிக்காவில் பெரிய நகரம் நியூயார்க். இது உலகத்திலுள்ள பெரிய நகரங்களில் இரண்டாவதாகும். உலகத்திலுள்ள பெரிய நகர் லண்டன். இந்த நியூயார்க் நகரத்தில் பள்ளிக்கூடங்கள் உள்ள இடங்களில் "பள்ளிக்கூடஎல்லை; மெதுவாகப்போ" என்று எழுதப்பட்ட போர்டுகள் நாட்டப் பட்டிருந்தன. இவ் வெச்சரிக்கை, மோட்டார்வண்டி ஓட்டுபவர்களுக்கே முக்கியமான தெனக் கருதப்பட்டது. அதை அவர்கள் அலட்சியம் செய்து பள்ளிக்கூடத்துக்கு நேரே வேகமாக ஓட்ட ஆரம்பித்தார்கள். இதைக்கண்ட பள்ளிக்கூட அதிகாரிகள் "நம் குழந்தைகளைக் கவனிக்க வேண்டாமா?" என்று எழுதப்பட்ட போர்டுகளை முன்னர்க்கூறப்பட்ட போர்டுகளுக்குக் கீழே தொங்கவிட்டார்கள். இவ்வாறு தொங்கவிட்ட பின்னரே பள்ளிக்கூடங்களுக் கருகில் வண்டிகள் மெதுவாக ஓட்டப்பட்டன.

* * *

## மீன் சண்டை

பிராணிகளைச் சண்டைக்குவிட்டு அச் சண்டையால் ஒருவிதச் சந்தோஷத்தைப் பெறுவது மனித இயற்கை. இங்கிலாந்தில் இரண்டு அல்லது மூன்று நூற்றாண்டுகட்கு முன்னர் இரண்டு கடிகளைச் சண்டைக்கு விட்டு அச்சண்டையைக் கண்டு களித்தவர் பலர். நம் நாட்டில் கோழிச் சண்டைகள் வழக்கமாக இருக்கின்றன. இதற்காகவே இரண்டு சேவற் கோழிகள் வளர்க்கப்படுகின்றன. இரண்டில் ஒன்று இறந்துபட்டாலே கோழிச் சண்டை முடிவுபெறும். சயாமில் மீன் சண்டைகள் நடக்கின்றன. 'பெட்டாஸ்' என்ற மீன்கள் நீர் நிறைந்த கண்ணாடிப்புட்டிகளில் வளர்க்கப்படுகின்றன. சில சமயங்களில் அவைகளுக்குள் ஏற்படும் சண்டைகள் சயாமியர்க்குப் பெரிய மகிழ்ச்சியை உண்டாக்குகின்றன.

* * *

## ஒரு நாளைக்கு 240 ஏகர்

அமெரிக்காவில் காட்டிலாகாத் தலைவர் புரொபஸர் - கிளாரன்ஸ் - இ. லிப்பி. அவர் நியூயார்க் நகரத்தில் இருக்கிறார். இப்போது பெரிய நகரங்களிலுள்ள சில தினசரிப்பத்திரிகைகள் நாள்ஒன்றுக்குத்தனித்தனியே 1800-ம் வருஷத்தில் அமெரிக்காவில் செய்யப்பட்ட காகிதத்தைவிட அதிகமாக உபயோகிப்பதாகக்கணக்கெடுத்திருக்கிறார். தற்போதுள்ள ஒரு ஞாயிற்றுக்கிழமைப் பத்திரிகை ஒரு நாளையில் 240 ஏகர் நிலத்தில் உண்டாகும் மரக்கூழாலான காகிதத்தைவிட அதிகம் உபயோகிப்பதாக அவர் கூறுகிறார். இவ்வளவு அதிகமாக உபயோகித்தும் அமெரிக்காவிலுள்ள காட்டு மரங்களில் நான்கு சதவிகிதமே காகித உற்பத்திக்காக உபயோகப்படுத்தப்படுகிறது.

## குதிரை மயிர் தேவை

ருஷ்யாவிலுள்ள குதிரைகளின் மயிருக்குத் தேவை அதிகம். இது தொழிற்சாலைக்கு வேண்டிய இயற்கைப்பொருளாக உபயோகப்படுத்தப்படுகிறது. அதனால் குதிரை மயிரை வீணாக்குதல் கூடாதென அரசாங்கச் சட்டமொன்று பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. இச்சட்டப்படி வெட்டும் குதிரைமயிரை அரசாங்கத்துக்கு அனுப்புதல் வேண்டும். அனுப்பியவருக்கு மயிருக்குத்தக்க பணம் தரப்படும். வால் மயிருக்கும் பிடரி மயிருக்கும் அதிக பணம் தரப்படுகிறது.

* * *

## இரட்டைத் தேங்காய்கள்

இரட்டைத் தேங்காய்கள் என்ற உடனே சிலருக்கு இரட்டை வாழைப் பழத்தில் எண்ணம் உண்டாகலாம். வாழைப்பழத்தில் இரண்டு அல்லது மூன்று பழங்கள் ஒன்று சேர்ந்திருக்கின்றன. ஆனால் தேங்காய்களில் மட்டும் இரட்டைத் தேங்காய்களைக் காண்பதில்லை. இந்திய நாட்டுக்குத் தென்மேற்கில் மெடகாஸ்கர் என்ற ஒரு தீவு இருக்கிறது. இது ஆப்பிரிக்கா கண்டத்தின் கீழ்க்கரைக்குச் சமீபத்தில் உள்ளது. இத்தீவின் மேற்குப் பக்கத்தில் சைகிலஸ் என்ற மற்றொருதீவு கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது. இத்தீவிலுள்ள தென்னைமரங்கள் இரட்டைத் தேங்காய்களைத் தருகின்றனவாம்.

* * *

## ரேடியோ 'ஸ்டெதாஸ்கோப்'

ருஷ்யாவில் ஆகாய விமானங்களில் செல்வோரின் இருதயத் துடிப்பை அறிந்துகொள்ள புதியதொருரேடியோ 'ஸ்டெதாஸ்கோப்' கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இந்த 'ஸ்டெதாஸ்கோப்' ஆகாய விமானத்தில் இருக்கிறது. இதற்குச்சம்பந்தமான ரேடியோகருவியொன்று பூமியிலுள்ள டாக்டரிடம் இருக்கிறது. ஆகாய விமானியின் இருதயத் துடிப்பால் உண்டாகும் சப்தத்தை ரேடியோ மூலம் பூமியிலுள்ள டாக்டர் கேட்கிறார்.

* * *

## காதுகளே ரேடியோ கருவிகள்

இனி ரேடியோவுக்காக வேறோரிடத்திலும் போகவேண்டுவதில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு ரேடியோ கருவியாக மாறிவிடலாம். இப்படிச் சொல்பவர் அமெரிக்காவிலுள்ள ஆர்வர்ட் சர்வகலாசாலையைச் சேர்ந்த டாக்டர் எஸ். எஸ். ஸ்டீவன்ஸ் என்பவர். ஒவ்வொருவருடைய காதிலும் மின்சாரக்கருவி (எலெக்ட்ரோட்) வைக்க வேண்டுமென்றும், அதைக் கடல்நீரால் நிரப்ப வேண்டுமென்றும் அவர் கூறுகிறார். இவ்வாறு செய்யப்பட்டால் சப்தங்கள் உண்டாகின்றனவாம். இது வேரேடியோபேசுகிறமாதிரியும்பேசும்.

* * *

## மூக்குக் கண்ணாடிகளைத் துடைக்கும் கருவி

மூக்குக் கண்ணாடிகளை வாங்கும் போதே கண்ணாடிகளைத் துடைப்பதற்காக ஒருவிதத் துணி தரப்படுகிறது. இத்துணிகளுக்குப் பதிலாகஇப்போது வேறொரு புதிய சாமான் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இதை வெளியில் கஷ்டப்பட்டு எடுத்துச் செல்ல வேண்டிய அவசியமில்லை. மேல் சட்டைகளின் பைகளிலேயே வைத்துக் கொள்ளக்கூடும். இக்கருவி 'டாங்' உருவோடு இருக்கிறது. இரண்டு முனைகளிலும் இருவித அட்டைகள் இணைக்கப்பட்டிருக்கின்றன. மற்றொரு பக்கத்தில் ஒருவிதத் திராவகம் வைக்கப்பட்டிருக்கிறது. இக்கருவியை அழுத்துந்தோறும் அத்திராவகம் அட்டைகள் பக்கம்செல்கிறது. அத்திராவகமே கண்ணாடிகளைச் சுத்தம் செய்ய உதவுகிறது.

# உதிர்ந்த மலர்கள்

"இந்தியாவுக்கு ஜன நாயக ஆட்சி வேண்டுமானால் இந்திய மக்கள் கட்டுப்பாடாகவும் ஒழுங்காகவும் இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். இந்தியர்கள் தங்கள் அற்ப வித்தியாசங்களை மறந்து—ஜாதி, மதவித்தியாசங்களை ஒழித்து—பாரத சமுதாயத்தின் நன்மைக்காகப் பாடுபட வேண்டும்."

—ஸர். எஸ். இராதா கிருஷ்ணன்

* * *

"வேலையில்லாத் திண்டாட்டம்ஒழிய வேண்டுமானால், உற்பத்தித் தொழில்கள் தனிப்பட்டவர் வசமிருத்தல் கூடாது; சமூகத்தவரிடமே யிருத்தல் வேண்டும்."

—சௌம்யேந்திரநாத் தாகூர்

* * *

"கீதை ஜாதிப்பிரிவுகளை வற்புறுத்துவது என்றும், பார்ப்பனர் செய்த சூழ்ச்சி யென்றும் சிலர் சொல்கிறார். பக்ஷபாதமின்றி அதைப்படிப்பவர் அந் நூல் ஒரு சமூகச் சீர்திருத்தநூல் என்று கூறுவர். எத்தொழிலைச் செய்தாலும் இழிவில்லையென்றும், போட்டியின்றிக் கைம்மாறு கருதாமல் ஒவ்வொருவரும் தத்தம் கடமைகளைச் செய்ய வேண்டு மென்றும் கீதை போதிக்கிறது. அது ஜாதிப் பிரிவை ஒழித்துச் சமத்துவத்தையும் சுயநலமற்ற சேவையையும் வற்புறுத்துகிறது... சமதர்மம் அதில் பொதிந்துகிடக்கிறது. எதிர்காலத்தில் ஒவ்வொரு பட்டதாரியும் நம் சாஸ்திரங்களில் பயிற்சிபெற்றவராயிருக்க வேண்டும்."

—சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்

* * *

"சங்கீதத்தில் ஒவ்வொருவரும்பயிற்சி பெற வேண்டியது அவசியம். சிறுவர் சிறுமியர் ஆகிய இருபாலார்க்கும் சங்கீதம் கட்டாயம் கற்பிக்கப்படல்வேண்டும். சிலர் சங்கீதம் பெண்களுக்கே ஏற்றதென்று கருதுகிறார். அது தவறு. ......நம் நாட்டுப் பாடல்களிலும் நாட்டுக்கூத்துகளிலும் நாம் கவனம் செலுத்தவேண்டும்."

—புரொபசர் சாம்பமூர்த்தி.

* * *

"நம்நாட்டு முன்னேற்றத்துக்குக் கிராமங்கள் மட்டும் போதா; நகரங்களும் அவசியம். ஒவ்வொன்றிலும் சில நன்மைகள் இருக்கின்றன; தவிர்க்க முடியாத சில குறைபாடுகளும் உள்ளன. நகரமக்களைவிட நாட்டுமக்கள் அறிவில் குறைந்தவர்களாகக் காணப்படுகிறார்கள். அவர்களிடம் ஒழுங்கு முறையில்லை. கிராமத்தவர் கல்வியறிவின்மையால் குறுகிய நோக்கமுடையவர்களாகக் காணப்படுகிறார். நம் கிராமங்களில், நகரங்களில் காணப்படும் வசதிகள் இல்லை. சீக்கிரத்தில் போக்கு வரவு வசதிகள், பத்திரிகை வசதிகள், மின்சார வசதிகள் முதலியன இல்லை.........பென்ஷன் பெறும் உத்தியோகஸ்தர்கள் கிராமங்களுக்குத் திரும்பாமல் நகரங்களிலேயே வசிக்கிறார்கள். அது வருந்தத்தக்கது."

—ராவ்பகதூர் வேங்கடராமன்.

* * *

"நூல் நிலையங்கள் சிறுவர் மனத்தைக் கவரத்தக்கனவாயிருத்தல்வேண்டும். சிறுவர் தினமும் நூல் நிலையங்களை நாடிச் செல்லத்தக்க முறையில் அவை அமைக்கப்படல் வேண்டும்."

—ராவ் சாகிப் ரங்கநாதம்

---

தேர்தலில் வர்ண'பாலட்' பெட்டிகள் உபயோகிக்கப்படும். வர்ணங்களை பேதப்படுத்திக் கூறமுடியாதவருக்கு அபேட்சகரின் பெயரையும் பெட்டிகளின் வர்ணங்களையும் விவரமாகக் கூறும்படி அரசாங்கத்தால் தேர்தல் நிலையத்திலுள்ள உத்தியோகஸ்தர்களுக்குக் கட்டளை பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
என்கடன் பணிசெய்து கிடப்பதே
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற். கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1937ஸு ஜனவரிமீ 8உ

# இருப்பதா? இறப்பதா?

ஸ்பெயின் இருப்பதா? இறப்பதா? ஐரோப்பா இருப்பதா? இறப்பதா? உலகம் இருப்பதா? இறப்பதா?

ஸ்பெயினில் மூண்டுள்ள போர் ஸ்பெயின் அளவிலா நிற்கிறது? இல்லையே. அப்போர் ஐரோப்பாவைக் கவர்ந்திருக்கிறது; உலகைக் கவர்ந்திருக்கிறது.

ஸ்பெயினில் நடைபெறுவது உள் நாட்டுக் குழப்ப மென்று சொல்லப்படுவது தவறு. அஃது உள்நாட்டுக் குழப்ப மன்று. அங்கே இதாலியும் ஜெர்மெனியும் ஒரு பக்கம் நின்றும், ருஷ்யா மற்றொரு பக்கம் நின்றும் தற்போது போர் புரிகின்றன. இரு சார்பிலும் இனி வேறுபல தேசங்களுஞ் சேர்ந்து கொள்ளும். நாம் அடிக்கடி கூறியுள்ளபடி ஸ்பெயின் யுத்தம் ஓர் உலக யுத்தமாகும் என்பதில் ஐயமில்லை.

ஸ்பெயினில் நடை பெறும் போரின் குறிக்கோள் என்னை? 'பாஸிஸ'த்தை 'ஸோஷியலிஸம்' விழுங்குவதா அல்லது அது இதை விழுங்குவதா என்பதாகும்.

பழைய அரசியல் கட்சிகளெல்லாம் இனி உலகில் இடம் பெறுதல் அருமை. உலகில் தற்போது நிலவுங் கட்சிகள் இரண்டே. ஒன்று 'பாஸிஸம்'; மற்றொன்று 'ஸோஷியலிஸம்'. இரண்டும் ஒன்றோடொன்று மலைந்து போர் புரியத் துவங்கி யிருக்கின்றன. அதுவே ஸ்பானியப் போர் என்னும் பெயரால் நடைபெறும் உலகப் போராகும்.

ஸ்பெயின் கலகத் தலைவராகிய ஜெனரல் பிராங்கோ, முஸோலினியும் ஹிட்லரும் ஆட்டும் பாவையாக நின்று தமது தேசத்தைத் தாமே பாழ்படுத்தி வருகிறார். தாய் நாட்டை இவ்வாறு அலைத்து அலைத்துப் படுகொலை செய்வோர் உலகிலிருப்பரோ? ஜெனரல் பிராங்கோவைப் போன்ற தேசத் துரோகியை இதுகாறும் உலகம் கண்டிருக்குமோ? தேசத் துரோகமே ஒரு வடிவங் கொண்டு வந்ததுபோல ஜெனரல் பிராங்கோ விளங்குகிறார்.

ஜெனரல் பிராங்கோ மனிதரா அரக்கரா என்பது ஐயம். நிரபராதிகளைச் சுடுவதும், பெண் மக்களை வதைப்பதும், குழந்தைகளைக் கொல்வதும் எவர் செயல்? பொது நிலையங்களை அழிப்பதும், கோயில்களைத் தகர்ப்பதும், ஆஸ்பத்திரிகளை இடிப்பதும் மனிதச் செயல்களா? அரக்கர் செயல்களா?

'ஸோஷியலிஸம்' தரைமீது முளைத்துத் தழையாதவாறு கல்ல வேண்டுமென்று முஸோலினியும் ஹிட்லருங் கொண்டுள்ள உறுதியே, ஜெனரல் பிராங்கோ வாயிலாக, ஸ்பெயினில் அசுரப் போராய் உருக்கொண்டு உயிர்களை நாசஞ் செய்கிறது. இதுவா உள்நாட்டுப் போர்?

ஸ்பெயின் போர் உலகப் போராக மாறி வருகிறது. உலகோர் கருத்தை அப் போர் ஈர்த்து நிற்கிறது. உலகமே ஒன்றுபட்டுக் கடனாற்றும் நிலை நேர்ந்திருக்கிறது. இல்லையேல் உலகம் பாழ்படும். இன்று ஸ்பெயினில் நடைபெறுங் கொலை, நாளை ஒவ்வொரு வீட்டிலும் நடைபெறுவதாகும். இன்று ஸ்பெயினில் பெண்மக்கள் மீதும், குழைந்தைகள் மீதும் எறியப்படுங் குண்டுகள், நாளை ஒவ்வொரு வீட்டிலுமுள்ள பெண்மகள் மீதும், குழந்தைமீதும் எறியப்படும். ஒவ்வொரு குடும்பமும் சுதந்திரத்துடன் வாழ வேண்டுமானால், ஒவ்வொருவரும் ஸ்பெயின் போரில் ஒவ்வொரு வழியிற் கலந்து, 'பாஸிஸ'த்தைத் தொலைக்கத் துணைபுரிதல் வேண்டும்.

இங்கிலையில் பிரிட்டனும், பிரான்ஸும் நடுநிலை நின்று சமாதானப் பாடல் பாடுவது வீணேயாகும். முஸோலினியின் மிடுக்கும், ஹிட்லர் செருக்கும் வீழ்ந்தாலன்றி அவர் சமாதானத்துக்கு வாரார். ருஷ்யா, 'பாஸிஸ'த்தை எதிர்க்கச் சித்தமாயிருக்கிறது. இச்சமயத்தில் பிரிட்டனும், பிரான்ஸும் ருஷ்யாவுடன் கலந்து கொள்வதே அறிவுடைமை.

அமெரிக்கா, ஸ்பெயின் அரசுக்குத் துணைபுரிய முன்வந்தது இங்கே குறிப்பிடத்தக்கது. ஸ்பெயின் அரசினர்க்கு 45 லட்சம் டாலர் பெறும் யுத்த தளவாடங்களைச் செய்தளிக்கும் உரிமை ஒரு தொழிற்சாலைக்கு அமெரிக்க அரசு வழங்கி யுள்ளது. ஆகவே அமெரிக்க அநுதாபம் எங்கே யிருக்கிறது என்பது கவனிக்கற்பாலது.

ருஷ்யாவுடன் அமெரிக்காவும், பிரிட்டனும், பிரான்ஸும் சேர்ந்தால் சினம் வாளா இராது. சீனமும் ருஷ்யாவுடன்சேர்ந்தேதீரும். சீனத்தை எதிர்க்க ஜப்பான், ஜெர்மெனி-இதாலியுடன் சேரும். ஆஸ்திரியா ஜெர்மெனி பக்கம் நிற்கு மென்பது உலகறிந்த தொன்று. சிறு சிறு தேசங்கள் விருப்பப்படி நடந்து கொள்ளும். பிரிட்டனும் பிரான்ஸும் சேரும் பக்கமே வெற்றி விளையும்.

உலகிலுள்ள எல்லா அரசுகளும் போரில் கலைப்பட்டால் உலக நிலை என்னவாகும்? சகோதரிகளே! சகோதரர்களே! ஆண்டவனை நினைந்தவண்ணமாயிருங்கள்; ஆண்டவனை நோக்கி உலகில் 'பாஸிஸம்' அருக அருக என்றும், சன்மார்க்கச் சமதர்மம் பெருக பெருக என்றும் வேண்டுங்கள்; மனமார வேண்டுங்கள். "கேளுங்கள்; கொடுக்கப்படும்"

## பிஷப்புக்கள்

எட்டாம் எட்வர்ட், மன்னர் பீடத்தை விடுத்து விலக நேர்ந்தமைக்குப் பல காரணங்களுண்டு. திருமதி ஸிம்ஸன் காரணம் ஒரு முன்னிலைச் சுட்டேயாகும். பல காரணங்களுள் சில, காண்டர்பரி 'ஆர்ச்பிஷப்'பும், யார்க் 'ஆர்ச்பிஷப்'பும் பிரபுக்கள் தூண்டுதலால் நிகழ்த்திய அநியாயச் சொற்பொழிவுகளாகும்.

எட்வர்ட், மன்னர் பதவியைத் துறந்த கதை பழமையாகி விட்டது. இன்னும் அதைப் பற்றிக் காண்டர்பரி-யார்க் 'ஆர்ச்பிஷப்'புகள் ஏன் தூற்றித் திரிதல்வேண்டும்? எட்டாம் எட்வர்ட் பெருந்தகைமையுடன் நடந்து கொண்டதை உலகமே போற்றுகிறது. 'பிஷப்'புக்களின் பேச்சும், செயலும் அவர்கள் வீழ்ச்சிக்கே மூலமாக நிற்றல்நேரினும் நேரும். 'பிஷப்'புக்களின் ஆக்கத்தைக் குறைக்க வேண்டு மென்னும் நோக்கத்துடன் ஒரு கட்சி உருக்கொண்டு எழுந்துவிட்டது. அக்கூட்டம் தன்பிரசாரத்தைச் செய்யவுந் தொடங்கிவிட்டது. 'பிஷப்'புக்களின் செயலை மறுப்பவருள் உலகறிந்த எச். ஜி. வெல்ஸும் ஒருவர் என்பது கவனிக்கத்தக்கது.

எட்டாம் எட்வர்ட் மன்னர் பதவியைத் துறந்து இன்புடனிருக்கிறார். ஆனால் அவர்தம் துறவு நாளடைவில் இங்கிலாந்தில் பலவித மாறுதலைச் செய்தே தீரும். அவைகளில் ஒன்று 'பிஷப்'புக்களின் ஆக்கங் குறைப்பதாகும். ஒரு சுதந்திர தேசம், இரண்டொரு 'பிஷப்'புகளுக்கு அடிமையாயிருக்க விரும்புங் கொல்!

திரு. வெல்ஸ் கூறியுள்ள மொழிகளின் சாரம் வருமாறு:—

எட்டாம் எட்வர்டைப் பற்றியும், அவரைச் சேர்ந்தவரைப்பற்றியும் 'ஆர்ச்பிஷப்' குறை கூறுவது நியாயமாகாது. அவர் கூறும் முறையில் அவர்களிடம் தவறுதலில்லை. எட்வர்ட் கோஷ்டியினர் தூய வாழ்க்கையையே நடாத்தி வந்தனர். அவர்கள் பழைய வழக்க வொழுக்கங்களில் பற்றுடையவர்களல்ல.

* * *

நான் திருமதி ஸிம்ஸனுக்காகப் பரிந்து பேச முன்வரவில்லை. ஒரு பெண்மணியைப்பற்றி மறைமுகமாக ஈனச் சொல் புகல்வது ஆண்மையாகாது. அவ்வாறு புகல்வோரைக் குதிரைச் சவுக்கால் அடிப்பதே நியாயமாகும். மதக் குருக்கள் இத்தகைத் தண்டனையைப் பெறமாட்டார்கள். இந்த வாய்ப்பு மதக் குருக்களுக்கு உண்டு.

இங்கே தண்டனையினின்றும் 'பிஷப்'புகள் தப்பினும் நாளை ஆண்டவன் முன்னிலையில் அவர்கள் தப்பமுடியுமா?

## இடியேறு

### கிறிஸ்துவும் தாகூரும்

சாந்திநிகேதனத்தில் கிறிஸ்துவின் திருநாள் கொண்டாடப்பட்டது. அதுபோழ்து கவி ரவீந்திரநாதர் ஓர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினர். அது பெரிதும் காலத்துக்குரியதாயிருக்கிறது. அச் சொற்பொழிவின் சாரம் வருமாறு:—

மக்கள் கூட்டத்தை விடுத்து இன்னும் விலங்கியல்பு முற்றும் நீங்கவில்லை. மனிதப் பிறவி காரணமாக மனிதரிடத்துச் சிற்சில மாறுதல்கள் காணப்படுகின்றன. காணப்பட்டாலும் பழைய உணர்வு இன்னும் மன்பதையில் நிலவிக்கொண்டே யிருக்கிறது. இடையிடையே அன்பு என்னும் ஒளிகாட்டப் பெரியோர் தோன்றுவது வழக்கம். அவருள் ஒருவர் கிறிஸ்துநாதர். இத்தலைவருக்கும், உலகியல் தலைவருக்கும் உணர்வில் வேற்றுமையுண்டு. முன்னவர் ஆத்ம சக்தி வழி நடப்பவர்; பின்னவர் தேக சக்திவழி நடப்பவர். அவ்வப்போது தோன்றும் பெரியோரது அன்பொளியே மனிதரது இருளை ஓரளவிலாதல் விலக்கிவருகிறது. இன்று கிறிஸ்துவின் திருநாளை முன்னிட்டு அவருக்கும், மற்றப் பெரியோர்க்கும் வணக்கஞ் செலுத்துவோமாக.

இம்மொழிகளின் உள்ளக்கிடக்கையைக் கூர்ந்து கவனித்தல் வேண்டும். இந்நாளில் அரசியல் என்னும் போர்வையின் கீழ் உலகில் நாத்திகக் கூட்டம் பெருகி வருகிறது. அக்கூட்டத்திடை உலகம் நெருக்குண்டு எரிகிறது. கவி தாகூர் போன்றோர் மொழி, எரியைச் சிறிது தணிப்பதாகும். கிறிஸ்துவின் அன்பொளி மன்பதையின் இருளைப் போக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அன்பொளிப் பக்கம் உலகம் திரும்புவதாக.

### கோயிலும் சாதியும்

ரோமன் கத்தோலிக் கிறிஸ்துவக் கோயில்களிலும் சாதிப்பேய் நடம்புரிவதாகவும், அது பற்றிச் சிறுசிறு கிளர்ச்சி எழுந்து வருவதாகவும் பத்திரிகைகள் வாயிலாக அறிகிறோம். இந்திய மக்கள் எச்சார்பு கொள்ளினும் அவர்களைச் சாதிப்பேய் விடுவதில்லை. அன்புமயமான கிறிஸ்துவின் கோயிலிலும் சாதிப்பேய் புகுந்திருப்பது ஆச்சரிய மூட்டுகிறது. கும்பகோண மாதா கோயிலில் சாதிக் கிறிஸ்துவர் ஒரு பக்கமும், ஆதிதிராவிடக் கிறிஸ்துவர் வேறொரு பக்கமும் அமர்ந்து சாதியற்ற கிறிஸ்துவை வழிபட வேண்டுமாம். சாதிப் பேயுள்ள விடத்தில் சாதியற்ற அன்புக் கிறிஸ்துத் தெய்வம் எங்ஙனமிருக்கும்? கிறிஸ்துவைத் தொழுவோர் சாதிப்பற்றுடையவராயின், அவர் கிறிஸ்துவராகார். அவர்தம் பெயர்கள் ஜனகணிதத்தில் கிறிஸ்துவர் என்று பதியப் பெறலாம்; ஆனால் கிறிஸ்துவின் பரலோக ராஜ்யத்திலுள்ள கீழ்க்கணக்கில் பதியப் பெறா. கிறிஸ்துவுக்கு வேண்டுவது அன்பு; சாதியன்று. கிறிஸ்து, பேயை யோட்டவந்தவர். அவர் தங் கோயிலில் பேய்களுள் ஒன்று ஆடலாமோ? ஆகவே கிறிஸ்துவை உண்மையாக நேசிப்பவர் சாதியுள்ள இடத்தைக் கோயிலாகக் கொள்ளலாகாது. அவர் தாம் வாழும் வீட்டையே கோயிலாக் கொண்டு ஆண்டவனைத் தொழுது வரலாம். சமரசம் உள்ள இடமெல்லாம் கிறிஸ்துவின் கோயில்களாம்.

### பொருளாதாரம்

சென்ற மாதக் கடைசியில் ஆக்ராவில் பொருளாதார மகாநாடு கூடிற்று. டாக்டர் ஜான் மத்தாய் தலைமை வகித்தார். டாக்டர் மத்தாய் பொருளாதார நிபுணர். அவர் மேல்நாட்டுக் கியைந்தமுறையில் எழுதப்பெற்ற பொருளாதார நூல்கள் இந்தியாவுக்கு இயைந்தனவல்ல என்றும், இந்தியாவின் இயற்கை வளத்துக் கேற்ற வண்ணம் பொருளாதார நூல்கள் எழுதப்படல் வேண்டுமென்றும், அவைகளுக் கேற்பத் திட்டங்கோலி வேலை செய்தல் வேண்டுமென்றும் பேசியுள்ளார். பொருளாதாரம் சிறுமையுறுங் காலத்தில் பொருளாதார மென்றும், திட்டமென்றும் பேசப்படுதல் இயல்பு. நூலறிவு ஓரளவில் பயன்படுமேயன்றி முற்றிலும் பயன்படுவதாகாது. பொருளாதார நிபுணர்களும், நூல்களும், திட்டங்களும், மகாநாடுகளும், தீர்மானங்களும் பெருகாத காலத்தில் - மக்கள் இயற்கையுடன் இயைந்து வாழ்ந்த காலத்தில் - பொருளாதாரம் சிறுமை யுறவில்லை. சாம்ராஜ்ய உணர்வு பெருகப் பெருகப் பொருளாதார நெருக்கடி ஏற்படுகிறது. சாம்ராஜ்ய முறை யொழிந்து, சன்மார்க்கச் சமதர்ம உணர்வு பரவி, வாழ்வில் இடம் பெற்றால் பொருளாதார நிலை சமன்படும். அதுவரைப் பொருளாதாரப் பேச்சு, கடலெனப் பெருகிக்கொண்டே போகும். நோயுள்ள இடத்தை யுணர்ந்து, தக்க மருந்து தேடுவதே சிறந்தமுறைமை.



# உலக யுத்தம் எப்பொழுது?

## ருஷ்யா யுத்தத்துக்குச் சித்தமா?

## இதாலியும் ஜெர்மெனியும் யுத்தம் தொடங்கா

[o]

### பல நாடுகளின் பொருளாதார நெருக்கடி

(திரு. மாக்ஸ்வேல். எஸ். ஸ்டீவார்ட்)

### உலக யுத்தம்

சாதாரண மக்கள் உலக யுத்தத்துக்கு வேண்டப்படுவன இரண்டு வசதிகள் என்று கருதுகிறார்கள். அவை இராணுவ பலமும் பண உதவியுமாகும். இராணுவ பலம் இருந்தும் பொருளாதார நிலைமை மிகக் கேவலமான இக்காலத்தில் உலக யுத்தம் ஆரம்பிக்கப்படுமா வென்பது பலருடைய கேள்வியாக இருந்துவருகிறது. இவ்விஷயம் சாதாரணமானதன்று; ஆழ்ந்து யோசிக்கவேண்டிய ஒன்று.

ஐரோப்பிய யுத்தத்துக்கு முன்னர் இருபதாம் நூற்றாண்டில் உலக யுத்தத்துக்கு இடமில்லை என்று கூறப்பட்டது. எங்கும் காணப்படும் வறுமையே இதற்குக் காரணமாகக் கூறப்பட்டது. ஆனால் ஐரோப்பிய யுத்தம் நான்கு வருஷங்களுக்குமேல் நடந்தது; சுமார் அறுநூறுயிரமே கோடி ரூபாயை விழுங்கிற்று. இவ்வளவு செலவாகியும் இப்போது எந்த அரசாங்கமாவது உலக யுத்தத்துக்குச் சித்தமாக இல்லைஎன்று கூறுகிறதா? இல்லை. காரணமென்ன? அரசாங்கங்கள் பணத்தைப் பற்றிக் கவலையற்றிருக்கின்றன. நினைத்தமாத்திரத்தில் அதிக வரிவிதிப்பதாலும், கடன் வாங்குவதாலும், பணக்காரருடைய சொத்துக்களைப் பறிமுதல் செய்வதாலும் ஏராளமான பணம் திரட்டப்படுகிறது. தொழிற்சாலைகள் விருத்தியாக இயற்கைப் பொருள்கள் அவசியம். உலக யுத்தத்தால் இவ்வியற்கைப் பொருள்களுக்குச் சில தடைகள் உண்டாகும்.

### யுத்தத்துக்கு வேண்டுவன

இனி உண்டாகக்கூடிய உலக யுத்தத்துக்கு மனித பலம் அதிகம் வேண்டுமென்பது இல்லை. ஆகாயவிமானங்களும், டாங்கிகளும், இயந்திரத் துப்பாக்கி உதவி பெற்ற காலாட்படைகளுமே சில மணி நேரங்களில் மனது திடுக்கிடும்படியான கொடுமைகளைச் செய்தல்கூடும். அதனால் இனி நிகழவுள்ள சண்டைகளெல்லாம் மனித பலத்தாலன்றி அறிவியல் ஆராய்ச்சியாளரின் திறமையினாலேயே நடத்தப்படும். அதனால் தற்போது வேண்டுவன பெரிய தொழிற்சாலைகள். சண்டைக் காலத்தில் பெரிய தொழிற்சாலைகளாலும் பயன் விளைவதில்லை. எவ்விதத் தடையுமின்றி இயற்கைப் பொருள்கள் கிடைத்தாலன்றோ தொழிற்சாலைகளில் யுத்த ஆயுதங்கள் செய்யப்படும்? அதனால் சண்டையில் ஈடுபட்டுள்ள இரு பெரிய இராஜ்யங்களுக்குப் பெரிய தொழிற்சாலைகளிருந்தாலும் அவரவர்க்குக் கிடைக்கக்கூடிய இயற்கைப் பொருள்களின் வசதியே யுத்தத்தின் வெற்றியை நிச்சயிக்கக் கூடியதா யிருக்கும். அதனால் யுத்தத்தின்போது கவனிக்கவேண்டிய விஷயங்கள் ஆறு இருக்கின்றன. அவை யாவன: (1) நிரந்தரமாகவுள்ள ஓர் இரும்பு—எஃகுத் தொழிற்சாலை. (2) இயந்திர உற்பத்தித் தொழிற்சாலை. (3) நிரந்தரமான இரசாயனத் தொழிற்சாலை. (4) நிலக்கரி வசதிகள். (5) இரும்பின் தாதுப் பொருள் வேண்டியவளவு கிடைத்தல். (6) வேண்டிய எண்ணெய் வகைகள் கிடைத்தல்.

### ஜெர்மெனியின் பலஹீனம்

மற்ற நாடுகளைவிட ஜெர்மெனியில் தொழிற்சாலைகள் அதிகமாகவே காணப்படுகின்றன. 1914-ம் ஆண்டில் ஏற்பட்ட ஐரோப்பிய யுத்தத்தின்போது ஜெர்மெனியில் வெளிநாட்டுச் சரக்குகள் இறங்குதல் கூடாதென்ற கடுமையான உத்தரவு ஒன்று பிறப்பிக்கப்பட்டது. ஜெர்மெனி இதைவீரத்தோடுசமாளித்தது. யுத்தத்தில் கிடைத்த தோல்வி ஒருபக்கமிருக்க ஜெர்மெனி இவ்வளவு முன்னேறியது போற்றற்குரியதே. இரசாயனப் பொருள்கள் உற்பத்தி செய்வதில் உலகில் இரண்டாவது நாடாக அது நிற்கிறது. முதன்மை ஸ்தானம் பெறுவது ருஷ்யா.

### இயற்கைப் பொருள்கள்

ஜெர்மெனி தொழிற்சாலைகளில் முதன்மை பெற்றிருந்த போதிலும் இயற்கைப் பொருள்களின் வசதி பெற்றில்லை. 1914-ல் கிடைத்த அளவு கூட இப்போது கிடைக்காது. நிலக்கரி, இரும்பு, பெட்ரோலியம், பருத்தி முதலிய நான்கு தாதுப் பொருள்களில் ஐரோப்பிய யுத்தத்துக்கு முன் கிடைத்த அளவு நிலக்கரி மட்டுமே கிடைக்கிறது. பலவித கைத்தொழில்களுக்கும், யுத்த ஆயுதங்களுக்கும், விஷப்புகைக்கும் நிலக்கரி இன்றியமையாத முக்கியப் பொருளாகும். ஐரோப்பிய யுத்தத்துக்குமுன்னர், ஐரோப்பாவில் கிடைக்கும் நிலக்கரியில் 40 சத விகிதமும், இரும்பில் மூன்றில் ஒருபாகமும் ஜெர்மெனியில் கிடைத்தன. ஆனால் வெர்செயில்ஸ் உடன்படிக்கைப்படி 10-ல் ஒருபங்கு ஜெர்மானியர் பிரிக்கப்பட்டார். நூற்றுக்குப் பன்னிரண்டு பங்கு நிலம் அந்நியரால் கைப்பற்றப்பட்டது. 26 சதவிகிதம் நிலக்கரியும், 75 சதவிகிதம் இரும்பும் பிடுங்கப்பட்டன. லொரெயின் பிரதேசத்தோடு பத்தில் ஏழுபங்கு இரும்பைப் பிரான்ஸ் ஜெர்மெனியிடமிருந்து கைப்பற்றியது. தற்போது ஜெர்மெனிக்கு ஸ்வீடனிலிருந்து இரும்பு கிடைக்கிறது. யுத்தம் தொடங்கினால் இது தடைப்படும்.

நிலக்கரி ஒருபக்கமிருக்க, ஜெர்மெனிக்கு வெடியுப்பு கிடைப்பதில்லை. ஐரோப்பிய யுத்தத்தின் பயனாகக் கைத்தொழில்களுக்கு இன்றியமையாதனவான துத்தநாகம், செம்பு, ஈயம், கந்தகம், வெள்ளீயம், ரப்பர், 'குரோமியம்,' மாங்கனீஸ், தகரம், பாதரசம், 'மைகா' முதலியவை ஜெர்மெனிக்குக் கிடையா. ஜெர்மெனியில் 'பென்ஸின்' என்ற ஒருவிதப் பொருள் உற்பத்தி செய்யப்படுகிறது. இது அதிக விலையுள்ளதாகிறது. ஜெர்மெனி விவசாயத்தில் முதன்மை ஸ்தானம் பெற்றிருந்தபோதிலும் மக்களுக்குப் போதிய அளவு உணவு கிடைக்கவில்லை. வேண்டிய எண்ணெய் வித்துக்களும் கிடையா.

யுத்த காலத்தில் இத்தாதுப் பொருள்களில் தடை ஏற்படாதிருக்க ஜெர்மெனிக்குப் பிரிட்டனின் உதவி அவசியமாகும். ஜெர்மெனி பிரிட்டனை விரோதம் செய்துகொண்டால் இப்பொருள்களுக்குத் தடை உண்டாகும். அப்போது ஸ்காண்டிநேவிய நாடுகளும், ஆஸ்திரியா, செகோஸ்லோவாகியா, போலந்து முதலிய நாடுகளும் ஜெர்மெனி பக்கமிருந்தாலும் இப்பொருள்கள் கிடைக்க மாட்டா. ஜெர்மெனியில் தங்கச் சேமிப்பு அதிகம் இல்லை. இதனாலேயே சென்ற ஆண்டு ஜெர்மெனியில் பெரிய நெருக்கடி உண்டாயிற்று. யுத்தம் தொடங்கப்படுமேல் இந்த நெருக்கடி அதிகமாவது நிச்சயம். எவ்வுதவி கொண்டும் இதைப் போக்குதல்அரிது.

### இதாலியின் நிலைமை

இதாலியின் நிலைமையோ இதை விடக் கேவலமாக இருக்கிறது. நிலக்கரி, இரும்பு முதலிய உலோகங்கள் கிடையா. தொழிற்சாலைகளும் பெருகவில்லை. 1934-ம் ஆண்டில் இரும்பு உற்பத்தியில் இதாலி, உலக வரிசைக் கிரமத்தில் பன்னிரண்டாவது நாடாகும்; எஃகு உற்பத்தியில் பத்தாவது நாடாகும். இரசாயனத் தொழிற்சாலைகளும் கேவலமாக இருக்கின்றன. சிறிதளவு துத்தநாகம், பாதரசம் முதலியவை கிடைக்கின்றன. யுத்தகாலத்தில் நிலக்கரி, எண்ணெய் முதலியவைகளுக்கு இதாலி மிகுந்த கஷ்டத்தை அடையும். எதியோபிய வெற்றியால் ஒருவாறு எண்ணெயைப் பற்றிய வருத்தம் ஒழிந்து விடுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால் ஜெர்மெனியைப் போன்று இதாலியும் உணவுப் பொருள்களுக்கு வெளிநாட்டையே எதிர்பார்க்கிறது. தங்க விஷயத்திலும் இதாலி ஜெர்மெனியைப் போன்றேயிருக்கிறது. அதனால் யுத்தந் தொடங்கப்படுமேல் இதாலி-ஜெர்மெனியின் நிலைமை மிகக் கேவலமாக இருக்கும்.

### பிரான்ஸ்

பிரான்ஸில் தொழிற் சாலைகள் விருத்தியடையவில்லை. அதிக இரும்பைத் தரக்கூடிய லொரெயின் பிரதேசம் பிரான்ஸ் வசமிருந்தும் ஜெர்மெனியில் உற்பத்தியாகும் இரும்புப் பொருள் அளவில் பாதிகூடப் பிரான்ஸில் இல்லை. நிலக்கரியும் வேண்டிய அளவு கிடைக்கிறது. 'பாக்ஸைட்' என்ற தாதுப் பொருள் அதிகமாகக் கிடைக்கிறது. பிரான்ஸில் இதாலி-ஜெர்மெனியைப் போலல்லாது வேண்டிய அளவு உணவுப் பொருள்கள் கிடைக்கின்றன. குடியேற்ற நாடுகளிலிருந்து வேண்டியஅளவு மற்றப்பொருள்களைப் பிரான்ஸ் பெறுதல் கூடும். தங்க விஷயத்தில் பிரான்ஸை அமெரிக்காவுக்கு அடுத்தபடியாகக் கூறலாம். ஆதலின் பிரிட்டன் சிநேகமும் இருக்குமாயின் யுத்தகாலத்தில் நீண்டகாலம் வரை பிரான்ஸ் சமாளிக்கமுடியும் என்பதே இதன் முடிவாகும்.

### ருஷ்யா

இனி ருஷ்யாவைக் கவனிப்போம். மேற்கு நாடுகளைத் தாக்கியதுபோலப் பொருளாதார நெருக்கடி ருஷ்யாவைத் தாக்கவில்லை. அதன் அளவுகடந்த ஜனத்தொகையும், மட்டில்லாத நிலப்பரப்பும், தேவைக்கும் அதிகமான தாதுப் பொருள்களின் உற்பத்தியும் ஐரோப்பா கண்டத்தில் ருஷ்யாவுக்கு முதன்மைப் பதவி அளித்தன. சில வருஷங்களுக்குள் உலகம் அதிசயிக்கும்படி ருஷ்யா கைத்தொழில்களைப் பெருக்கிவிட்டது. 1926-ம் ஆண்டில் எஃகுத் தொழிலில் ருஷ்யா ஆறுவது நாடாக இருந்தது; இப்போது இரண்டாவது நாடாக மாறிவிட்டது. ஜெர்மெனியே முதன்மையான நாடு. உலகத்தில் எந்த நாட்டிலும் இல்லாத ஓர் அதிர்ஷ்டம் ருஷ்யாவுக்குக் கிடைத்திருக்கிறது. தனது எல்லைக்குள்ளேயே எஃகு உற்பத்திக்கு வேண்டிய இரும்பு, நிலக்கரி, 'மாங்கனீஸ்' முதலிய தாதுப் பொருள்கள் வேண்டிய அளவு கிடைக்கின்றன. அதிகமாகக் 'குரோமிய'மும் கிடைக்கிறது.

இரண்டாவது ஐந்து வருஷத்திட்டத்தில் இரசாயனத் தொழிலுக்கு வேண்டிய ஊக்கம் அளிக்கப்பட்டது. அதனால் இப்போது ருஷ்யா இரசாயனப் பொருள்கள் உற்பத்தியில் உலகத்தில் முதன்மை ஸ்தானம் பெற்றிருக்கிறது. ஆகாய விமானங்களும் ஏராளமாக உண்டாக்கப்பட்டன. எண்ணிக்கை மட்டும் தெரியவில்லை. ஐரோப்பாவின் மற்ற நாடுகளைவிட அதிகமான ஆகாய விமானங்களை ருஷ்யா வைத்துக் கொண்டிருக்கிறது என்பதுமட்டும் உறுதி.

தாதுப் பொருள்கள் உற்பத்தியில் ருஷ்யா அமெரிக்காவுக்கு அடுத்தபடியாயிருக்கிறது. அளவு கடந்த நிலக்கரி, இரும்பு, பெட்ரோலியம், பருத்தி 'பாஸ்பேட்', வெடியுப்பு, பாதரசம், 'ஆஸ்பெஸ்டாஸ்', 'பிளாடினம்', தேக்கு, எண்ணெய் வித்துக்கள் முதலியன கிடைக்கின்றன. செம்புமட்டும் அதிகமாகக் கிடைப்பதில்லை. துத்தநாகம், அலுமீனியம், ஈயம் முதலிய உலோகங்கள் கிடைப்பதும் அவ்வாறே கஷ்ட நிலையில் இருக்கிறது. தற்போது யூரல் மலையில் சில சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றால் ருஷ்யாவுக்கு இன்னும் பலவித நன்மைகள் ஏற்படுதல்கூடும். ருஷ்யாவில் ரப்பர் உற்பத்தியாவதில்லை. அதற்குப் பதிலாக 'டாஜாவிஸ்' என்ற பொருளும் 'கிருமியன் டான்டிலிய'னும் உண்டாகின்றன. அவை ரப்பருக்குப் பதில் உபயோகமாகின்றன. பிரான்ஸைப்போல உணவுப் பொருள்களுக்கு ருஷ்யா வெளிநாடுகளை எதிர்பார்க்கவில்லை. தங்கநிலைமையிலும் இந்நாடு மற்றநாடுகளுக்குச்சிறிதும் பின் வாங்கி நிற்கவில்லை. ஆனால் ருஷ்யாவில் ஒருபெரிய குறை இருக்கிறது. வேண்டிய அளவு போக்குவரவு சாதனங்கள் இல்லை.

### பிரிட்டன்

போதிய திறமையிலும், சாமார்த்தியத்திலும் பிரிட்டன் மற்றநாடுகளைவிடச் சிறப்புற்றிருக்கிறது. ஆனால் தாதுப்பொருள்களுக்கு அது தன் சாம்ராஜ்யத்தையும் வெளிநாடுகளையுமே எதிர்பார்க்கிறது. எதிரிகளுடைய நீர் மூழ்கிக் கப்பல்களாலும், ஆகாயப் படைகளாலும், இப் பொருள்கள் வெளிநாடுகளிலிருந்து தடுக்கப்படுமாயின் இங்கிலாந்து, உணவுக்கே மிகக்கஷ்டப்படும். தொழிற்சாலைகளும் செயலற்றுக் கிடக்கும். எல்லாவற்றிற்கும் முக்கியமான நிலக்கரிமட்டும் பிரிட்டனில் வேண்டிய அளவு கிடைக்கிறது. உலகத்தில் ஐந்தில் ஒருபங்கு நிலக்கரி

(12-ம் பக்கம் பார்க்க)

# தொழிலாளர் பகுதி

மலேயாவில் இப்பொழுது 3,36,000 இந்தியர்கள் வசிக்கிறார்கள். அவர்களது நிலைமையை விசாரித்தறிய மகாகனம் ஸ்ரீநிவாச சாஸ்திரியார் தலைமையில் ஒரு தூதுக்கோஷ்டி அந்நாட்டில் சுற்றுப்பிரயாணஞ் செய்கிறது. அங்குள்ள இந்தியத்தொழிலாளர்கள் தென் இந்தியாவில் இருப்பதைவிட அதிகச்சந்தோஷமாகவேயிருக்கிறார்கள். ஆதலால் தூதுக்கோஷ்டி அதிகமாகக் குறைகூற அங்கு ஒன்றுமில்லை. இந்திய மக்களில் ஒரு சிலர் பிற நாடுகளுக்குச்சென்று குடியேற எப்பொழுதும் சித்தமாயிருக்கிறார்.

மலேயாவில் ரப்பர் பயிரிடுவதற்கே தொழிலாளர் தேவை. அதற்கும் தென் இந்தியாவிலிருந்து போகும் அவ்வளவு தொழிலாளரும் தேவையில்லை. 1934-ம் வருஷம் மலேயா அரசாங்கத்துக்கும் இந்திய அரசாங்கத்துக்கும் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. வருஷந்தோறும் சில ஆயிரம் தொழிலாளர்களை மலேயா வேலைக்கு அமர்த்திக் கொள்வதென்று ஒப்புக் கொண்டது. ஆனால் அந்த வருஷத்திலேயே இருபதாயிரம் தொழிலாளர் சொந்தச் செலவில் மலேயாவுக்குச் சென்றனர். அவர்கள் நிலைமை இங்கு நன்றாயிருந்தால் அங்கே செல்லமாட்டார்கள்.

### தொழிலாளர் கூலி

ரப்பர் தோட்டங்களில் இப்பொழுது இந்தியத் தொழிலாளர் எட்டு அல்லது ஒன்பது மணி நேரம் வேலை செய்தல் வேண்டும். அவர்களுக்கு அளிக்கப்படும் கூலியும் நன்றாகவேயிருக்கிறது. ஆண் தொழிலாளர் ஒவ்வொருவருக்கும் ஒரு நாளைக்கு 40 சதம் அதாவது 11 அணா கூலி அளிக்கப்படுகிறது. ஒரு பெண் தொழிலாளர் எட்டணா பெறுகிறார். இப்பொழுதுள்ள வாழ்க்கைச் செலவைப் பொறுத்தமட்டில், அளிக்கப்படும் கூலியைக் குறைவாகச் சொல்ல முடியாது. 1929-ம் வருஷத்துக்குமுன்பு ஓரிரண்டு அணா அதிகம் அளிக்கப்பட்டது. ஆனால் அப்பொழுது வாழ்க்கைச் செலவும் அதிகமாயிருந்தது.

மலேயாவுக்கு ஏராளமாக இந்தியர் செல்கிறார். அதனால் தொழிலாளர்க்கு அதிகக்கூலி கிடைப்பதில்லை. குறைந்த கூலிக்குத் தொழிலாளர் கிடைக்கலானார். இதனால் அங்கே வேலையில்லாத் திண்டாட்டமும் இருக்கிறது.

### குடியேற நிலம்

மலேயாவிலுள்ள தொழிலாளர் குடியேறுவதற்கென்று பல வருஷங்களாக நிலங்கேட்கிறார். இன்று இந்தியர்கள் மலேயாவுக்குச் செல்கிறார்கள்; சில வருஷங்கள்வரை அங்கே உழைக்கிறார்கள்; தங்கள் அந்திய காலத்தில் தாய்நாட்டுக்குத் திரும்பி விடுகிறார்கள். இதைத் தோட்ட முதலாளிகள் விரும்புகிறார்களில்லை. அங்கேயே எப்பொழுதும் இருந்து அதையே தங்கள் நாடாகக் கருதக்கூடிய தொழிலாளர்களையே அவர்கள் விரும்புகிறார்கள்.

இவ்விஷயத்தில் எவ்வளவோ முயற்சிகள் செய்யப்பட்டன. ஆயினும் இந்தியர் மலேயாவுக்கும் இந்தியாவுக்கும் அலைந்த வண்ணமாயிருக்கிறார். 1932-ம் வருஷம் மலேயா அரசாங்கத்தார் டிக்ஸன் துறைமுகத்துக் கருகே பரீட்சார்த்தமாகத் தொழிலாளர்க்கென்று ஓரிடத்தை ஒதுக்கினர். ஆனால் அதனால் நினைத்த பலன் கிட்டியிராது.

### பணத்தை வீணாக்குகிறார்கள்

நல்ல நிலையிலிருந்த போதிலும் தொழிலாளர்களிடம் உறுதியான எண்ணமும், திருப்தியான வாழ்வும் காணப்படவில்லை. பிரிட்டிஷ் தோட்ட முதலாளிகள் இந்தியத் தொழிலாளர்க்குக் கூடுமான வசதிகளை அளித்திருக்கிறார்கள். வைத்திய வசதியும், தாய்மொழிப் பள்ளிக்கூடங்களும் அவர்களுக்கு ஏற்படுத்தப்பட்டுள்ளன. பல தோட்டக்காரர்கள் இந்துக் கோயில்களைகூடக் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். தொழிலாளர் இலாகா கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்தி யிருக்கிறது. ஆனால் அவற்றின் பலனைத் தொழிலாளர் நன்கு பெறவில்லை. தொழிலாளர்களிடம் பணம் மிச்சப்படுவதே கிடையாது. அவர்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேரிடம் இறந்தபின் தம்படி கூட மீதியிருப்பதில்லை. கள்ளிலும், பண்டிகைகளிலும், விழாக்களிலும் அவர்கள் பணத்தை வீணாக்குகிறார்கள். தங்கள் நேயர்களைப் பார்க்கக்கூட அவர்கள் மோட்டார்களில் செல்கிறார்கள்.

ஆயினும் பலர், பிரிட்டிஷ் தோட்டக்காரர்களும் அரசாங்கமும் தொழிலாளர் நன்மைக்கு ஒன்றும் செய்யவில்லையென்று பறைசாற்றுகிறார். அவர்தம் கூற்று ஆதாரமற்றது.

### வியக்கத் தக்கதே!

சமூக சம்பந்தமான விஷயங்களில் அங்குள்ள இதர நாட்டவர் பெறும் நலன்கள் இந்தியர்க்கும் அளிக்கப்படுகின்றன. கோலாலம்பூரிலுள்ள 'செலங்கர் கிளப்' போன்ற சங்கங்களில் இந்தியர் அங்கத்தவராதலைக்கூட மறுப்பாரில்லை. நிலம் வாங்கும் விஷயத்தில் இந்தியர்க்கென்று எவ்வித நிபந்தனையுமில்லை. அங்குள்ள ஸ்தலஸ்தாபனங்களில் இந்தியர்க்குப் பிரதிநிதித்துவம் உண்டு. அப்பிரதிநிதிகளும் இந்தியர் நலத்துக்குப் பாடுபடுகிறார். ஆயினும் இந்தியன் மேலும் ஆசைப்படுகிறான். ஸிவில் உத்தியோகங்களில் இந்தியர் நியமனம் பெறக்கூடாதென்ற நிபந்தனை எதுவுமில்லை. இந்தியச் சர்வ கலாசாலைகளில் எவ்விதப் பட்டமும் பெறுநிருந்தும் அரசாங்க உத்தியோகங்களில் இடம் பெறுவோர் ஸிவில் இலாகாவில் உத்தியோகம் வேண்டுவது வியக்கத் தக்கதே! மலேயாவில் நான்கு சமஸ்தான சபைகளிருக்கின்றன. அவைகளிலும் இந்தியர் பிரதிநிதித்துவம் பெறுகிறார்.

ஆகவே சாஸ்திரியார் தூதுக்கோஷ்டி குறை கூறத்தக்க விஷயம் எதுவும் அங்கில்லை. அது இந்தியாவுக்கும் மலேயாவுக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டுபண்ணக்கூடும்.

—திரு. என். பெருமாள் - (பீ · வா)

## மூக்கை யறுத்தான்!

பெல்கிராட் என்ற விடத்தில் ஸான்டர் என்பவன் ஒருநடனப்பெண்ணை மணம் புரிந்து கொண்டான். அவள் மிகவும் அழகானவள். அவளைப்பலரும் விரும்பிப்பார்த்தனர். அவள் புருஷனுக்கு அப்பொழுது மனம் எப்படித் துன்புறும்? அவன் துன்பத்தை அவள் அறிந்தாள்; தன் அழகைப் பங்கம் செய்துகொள்ள விரும்பினாள்; தன் மூக்கை யறுத்து விடுமாறு தன் கணவனுக்குக் கூறினாள். அவனும் அவ்விதமே செய்தான். அவனுக்கு ஆறு மாதச்சிறைவாசம் கிடைத்தது. தன் வேண்டுகோளுக் கிணங்கியே அவன் செய்ததாக அப்பெண் கூறினாள்.

## பெண்களுக்குப் பட்டம்!

ஜெர்மெனியில் குடும்பப்பெண்களுக்குக் 'குடும்பத்தின் பொருளாதார அதிகாரி' என்ற அர்த்தமுள்ள பட்டம் அளிக்கப்படுகிறதாம். 24 வயதுக்கு மேற்பட்ட பெண்களே இப்பட்டங்களைப் பெறத்தகுதியுள்ளவர்கள். அவர்கள் தங்கள் குடும்பங்களை 5 வருஷங்கள் நன்கு நடாத்தியிருத்தல்வேண்டும்; குடும்பவேலைகளை நன்கு அனுஷ்டிக்கவேண்டும். இதுவரை 700 பெண்களுக்கு இப்பட்டம் அளிக்கப்பட்டிருக்கிறது.

# தலைவர்கள்

### ஜவஹர்

பண்டித ஜவஹர்லால்நேரு பிப்ரவரி மாதம் 10-ந் தேதி தனி ஆகாய விமானத்தில் பம்பாயிலிருந்து மங்களூருக்குச் செல்வார். திருமதி. கமலாதேவி 'தாதா கம்பெனி' யாருடன் இதற்காக ஏற்பாடு செய்கிறார்.

திரு. நேரு மங்களூருக்குச் சென்றபின் நான்கு நாட்கள் கர்நாடக தேசத்தில் சுற்றுப் பிரயாணம் செய்வார்.

சென்ற வெள்ளிக்கிழமை ஜய்பல்பூரில் பெரிய பொதுக் கூட்டமொன்றில் அவர் பேசினார். மக்கள் தங்கள் வேற்றுமைகளை மறந்து ஒன்றுபடவேண்டுமென்றும், சுயராஜ்யத்துக் குழைக்க வேண்டுமென்றும், காங்கரஸ் அபேட்சகர்களை யாதரிக்க வேண்டுமென்றும் அவர் கூறினர்.

ஜவஹர் இப்பொழுது பீஹாரில் சுற்றுப் பிரயாணம் செய்கிறார். அம் மாகாணத்தில ஆறு நாட்கள் சுற்றுப் பிரயாணம் செய்வார். இம் மாதம் 16, 17, 18 தேதிகளில் அவர் பஞ்சாபில் பிரயாணம் செய்வார். அலகாபாத்திலிருந்து அவர் ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார். "தேர்தலுக்கு அபேட்சகர்களாக நிற்கும் காங்கரஸ்காரர்கள் காங்கரஸின் வீரர்கள். ஒரு கொள்கைக்காகவே சட்டசபைத் தேர்தலுக்கு அவர்கள் அபேட்சகர்களாக நிற்கிறார்கள் என்பதை உணர வேண்டும். இந்தத்தேர்தலில் சுயநலம் கருதும் சில காங்கரஸ்காரர் காங்கரஸ் அபேட்சகர்களுடன் போட்டி போடுவார். அவர்கள் காங்கரஸ்காரர்கள் அல்ல. பொது மக்களும் வாக்காளர்களும் இதைஉணர்தல் வேண்டும். காங்கரஸ் அநுதாபிகள் ஆனதை உதவுவார்களாக. அத்தகைய உதவியை வரவேற்போம்" என்று அவர் அவ்வறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

பீஹாரில் பக்ஸார் என்ற விடத்தில் பொதுக் கூட்டமொன்றில் பேசுகையில் "அரசாங்கம் பொதுமக்கள் வசத்ததாயிருத்தல் வேண்டும்; ஒரு சிலர் கைவசம் இருத்தல் கூடாது. ஜனவரி மாதம் 26-ந் தேதியைப் பூர்ண சுயராஜ்ய தினமாகக் கொண்டாடுங்கள். ஏப்ரல் மாதம் முதல் தேதி ஹர்த்தால் அனுஷ்டியுங்கள்" என்று அவர் குறிப்பிட்டார்.

பாட்னாவில் அவருக்கு மகத்தான வரவேற்பளிக்கப்பட்டது. பல்லாயிரக் கணக்கான மக்கள் பண்டிதரைத் தரிசிக்க இரவு ஒருமணி வரை காத்திருந்தார்கள். பண்டித ஜவஹர் அக்கூட்டத்தில் பேசுகையில் சுயராஜ்யத்தின் பொருளை விளக்கினர்; சட்டசபையில் காங்கரஸ்காரர் குலாமிகளாயிருக்கமாட்டார் என்று அவர் குறிப்பிட்டார். பாட்னா நகரசபை அவருக்கு ஓர் உபசாரமளித்தது. பர்ஹாம்பூரிலிருந்து ஸய்யாவுக்குப் பண்டிதர் பிரயாணம் செய்து கொண்டிருக்கையில் மூங்கில் ஏற்றப்பட்ட வண்டியொன்று பாதையை மறித்துக் கொண்டது. வண்டிக்காரன் எவ்வளவோ முயன்றும் வண்டி நகரவில்லை. இதைக்கண்டதும் ஜவஹர் மோட்டாரை விட்டுக் கீழேயிறங்கினர்; மூங்கில் வண்டியை ஓர் ஓரமாக நகர்த்தித் தம் மோட்டார் செல்வதற்கு வழியேற்படுத்திக்கொண்டார். இதுகண்ட வண்டிக்காரன் 'ஆகா! நானே அதிர்ஷ்டசாலி' என்று கூறிக்கொண்டான்.

### மகாத்மா காந்தி

இம்மாதம் 11-ந் தேதி திங்கட்கிழமை மகாத்மா காந்தி சென்னைக்கு வருவார். அன்றுமாலை மாம்பலம் ஹிந்தி பிரசார சபைக் கட்டிடத்தில் பிரார்த்தனை செய்துவிட்டு இரவு திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் அவர் திருவனந்தபுரம் செல்வார். 12-ந் தேதி மாலை அவர் திருவனந்தபுரம் சேர்வார். அங்கே மகத்தான வரவேற்பளிக்கப்படும். 14-ந் தேதி அவர் நாகர் கோயிலுக்குச் செல்வார். அங்கிருந்து வைக்கம் போவார்.

காந்தியடிகள் ஆமதாபாத் நெசவுத் தொழிலாளர் சங்கத்துக்கு எழுதியுள்ள கடித மொன்றில் தொழிலாளர் பொறுமையா யிருக்க வேண்டுமென்றும், வேலை நிறுத்தம் செய்ய இப்போது அவசியமில்லையென்றும், மத்தியஸ்தர் சிபார்சுகளை முதலாளிகள் ஏற்க மறுத்தால் பிறகு வேலைநிறுத்தம் செய்யலாமென்றும், மத்தியஸ்தர் முடிவைத் தொழிலாளர் ஏற்கவேண்டுமென்றும் குறிப்பிட்டுள்ளார்.

### சுபாஷ் போஸ்

சுபாஷ் சந்திரபோஸின் உள் நாக்கில் ஊறு உண்டா யிருக்கிறது. அவரது நுரையீரல்கள் 'எக்ஸ்ரே' மூலம் படம் பிடிக்கப்பட்டது. அதனால் என்ன தெரிந்ததென்பது பாபு சுபாஷுக்கு அறிவிக்கப்படவில்லை. இப்பரீட்சையின் முடிவு இந்திய அரசாங்கத்துக்குத் தெரிவிக்கப்படும். அவருக்கு ஆபரேஷன் செய்யப்படமாட்டாது. அவரது தேக நிலையில் அபிவிருத்தி எதுவுமில்லை.

'எக்ஸ்ரே' பரிசோதனை செய்ததில் வைத்திய நிபுணர்களால் திட்டமாக ஒன்றும் கூறமுடியவில்லை. ஆகவே சுபாஷ் போஸ் மறுபடியும் 'எக்ஸ்ரே' பரிசீலனைக்குட்படுத்தப்படலாம். அவர் கைது செய்யப்பட்டதிலிருந்து இதற்குள் தமது எடையில் 20 பவுண்டு குன்றி விட்டார்.

### சர்தார்படேல்

சர்தார்படேல் சீத பேதியால் துன்புறுகிறார். வைத்தியர்களின் ஆலோசனைக் கிணங்க அவர் பம்பாய் ஆஸ்பத்திரிக்குச் சென்று விட்டார். அவரைப் பரீட்சித்த டாக்டர்கள் கூறுவதாவது:—

"சிலகாலமாகச் சர்தாரைச் சீதபேதி வாட்டுகிறது. இப்பொழுது உடனே அவர் விஷயத்தில கவனம் செலுத்த வேண்டும். ஆனல் கவலைக்கிடமில்லை."

சட்டசபைத் தேர்தலுக்கு அபேட்சகர் நியமனம் செய்ததுபற்றிப் பேட்டி கண்ட நிருபரிடம் அவர் தெரிவித்ததாவது.—

"பதினோராயிரம் அபேட்சகர்கள் விண்ணப்பம் செய்து கொண்டார்கள். நியமனம் செய்யப்படாதவர்கள் தேர்தலில் தனி அபேட்சகர்களாக நிற்கக்கூடாது. இவ்விதம் எல்லாரும் முதலில் வாக்குறுதி கொடுக்கவேண்டும். விண்ணப்பம் செய்து கொண்டவரில் மூன்று பேர்தவிர எல்லாரும் தம் வாக்குறுதியைக்காப்பாற்றியிருக்கிறார். காங்கரஸ் கமிட்டிகளில் ஸ்தானம் வகிக்கும் சிலர் காங்கரஸ் அபேட்சகர்களை எதிர்ப்பதாகத் தெரிகிறது. குருரகுவீர தயாளருக்குக் காங்கரஸ்தலைவர் அளித்த தண்டனை பிறருக்கு எச்சரிக்கையாக விருக்கும்."

### பண்டித மாளவியா

சென்ற செவ்வாய்க் கிழமை யன்று பண்டித மாளவியாவின் 76 - வது பிறந்த தினம். அத்தினம் பலவிடங்களில் கொண்டாடப்பட்டது. ஹிந்து சர்வ கலாசாலையில் அவருக் களிக்கப்பட்ட உபசாரங்களுக்குப் பதிலளிக்கையில் அவர் குறிப்பிட்டதாவது:-

"இப்பொழுது நான் இறப்பதற்குக் காலமில்லை. எனது முன்னிருக்கும் திட்டத்தை முடிப்பதற்காக இன்னும் பத்து வருஷம் உயிரோடிருக்க நான் விரும்புகிறேன். ஹிந்துக்கள் பிறமதஸ்தரிடம் வெறுப்புக் காட்டக் கூடாது. உலகிலேயே ஹிந்துமதத்தைப்போதிக்கும் சர்வ கலாசாலை காசி ஹிந்து சர்வ கலாசாலை யொன்றே! இதுபோன்று இந்தியாவிலும், உலகெங்கும் பல சர்வ கலாசாலைகள் தோன்ற வேண்டும்."



## பால் விற்பவருக்கு மாதிரி வீடுகள்

### கால் நடைகளுக்குப் பசுமடங்கள்

ஈக்களும் கொசுக்களும் வியாதிகளைப் பரப்பும் தூதர்களா யிருக்கின்றன. தெருக்களில் உள்ள அசுத்தமான மாட்டுத் தொழுவங்களிலேயே அவை பிறக்கின்றன. வீடுகளின் முன் புறங்களில் மாடுகள் கட்டப்படுகின்றன. அதனல் உண்டாகும் அசுத்தமோ சொல்ல முடியாது. ஆயினும் அதை உணர்வார் இலர். பாலைக்கறந்து கொண்டதும் மாடுகளைத் தெருவில் விரட்டும் புண்ணியவான்களும் இருக்கிறார்கள். இந்த மாடுகளால் எவ்வளவோ துன்பங்கள் உண்டாகின்றன. தெருவில் கொட்டப்பட்டிருக்கும் குப்பை, குளங்களில் அவை மேய்கின்றன; குப்பைத்தொட்டிகளில் தலையை நுழைத்துக் கண்ட பொருள்களையெல்லாம் உட்கொள்ளுகின்றன. நடுத்தெருவில் சில மூர்டுகள் நிற்கின்றன. அதனல் அவ்வழிச் செல்வோர் படும் அவதியைச் சொல்ல முடியாது.

* * *

மைசூரிலுள்ள மாடுகளையும், மாட்டுத் தொழுவங்களையும் சமீபத்தில் நகரசபைத் தலைவர் கணக்கெடுத்தார். மைசூரில் 12,461 கால் நடைகள் உள்ளன. சராசரி ஒரு வீட்டுக்கு நான்கு கால் நடைகள் இருக்கின்றன. அவைகளில் மூன்றில் இரண்டு பங்கு பால் விற்பவருக்குச் சொந்தமானவை.

நகரில் மேய்ச்சல் வசதிகள் போதியனவாயில்லை. சிறுவர் மாடுகளை மேய்க்கிறார். அவர்கள் தங்களால் சமாளிக்க முடியாத அளவுக்கு மாடுகளை ஓட்டிச் செல்வதால் நன்கு மேய்ப்பதில்லை.

இந்த விஷயங்களை நகர சபைத் தலைவர் மக்களுக்கு எடுத்துக் கூறி அவைகளை நன்கு பாதுகாக்கும் விஷயத்தில் சொந்தக்காரர்களின் ஒத்துழைப்பை நாடுகிறார்.

இதற்காகப் பசுமடங்கள் கட்டப்படுகின்றன. அவற்றிற்குக் 'கோகுலம்' என்று பெயர். அவை அமைக்கப்படும் இடம் நகருக்குச் சமீபத்தில் உள்ளது. மேய்ச்சல் நிலங்களும், குளங்களும் அந்தப் பசு மடங்களுக்கு அருகேயுள்ளன. பால்காரர்களுக்கு மாதிரி வீடுகள் கட்ட ஏற்பாடுகள் நடக்கின்றன. ஒவ்வொரு வீட்டையும் கட்ட ஆயிரம் ரூபாய் செலவாகும். மாடு கட்டிக் கொள்ள அவ்வீடுகளில் வசதியிருக்கும். அவை வாடகைக்குப் பால்காரர்களிடம் விடப்படலாம்; அல்லது விற்கப்படலாம். அந்தப் பசுமடங்களில் ஈ, கொசு முதலியன விருத்தியாகாவண்ணம் தடுக்கப்படும். ஒவ்வொரு பசுமடமும் பிறகு ஒவ்வொரு பால் பண்ணையாகக்கூடும்.

## 'தற்கொலைச் சங்கம்'

நியூயார்க் நகரில் 'தற்கொலைச் சங்கம்' ஒன்றிருக்கிறது. பொருளாதார நெருக்கடியால் வேலை யிழக்க நேரிடும் நடிகர்களே இச்சங்கத்தின் அங்கத்தவர். முதல் முதல் வேலை யிழப்பவர், தலைவர் ரூஸ்வெல்டின் மாளிகை முன் தற்கொலை செய்து கொள்ள வேண்டுமென்பது அச்சங்கத்தின் நிபந்தனை. 28 வயதான எட்வர்ட் ஆப்பட் என்ற நடிகர் தம் தாயார் வீட்டில் தூக்குப் போட்டுக் கொண்ட பொழுது இச்சங்கத்தின் உண்மைகள் வெளியாயின.

## உலக ஒய். எம். ஸி. ஏ. மகாநாடு

உலக ஒய். எம். ஸி. ஏ. மகாநாடு சென்ற சனிக்கிழமை மைசூரில் ஆரம்பமாயிற்று. மகாநாட்டை மைசூர் மகாராஜா திறந்துவைத்தார். சுமார் 35நாடுகளிலிருந்து 250 பிரதிநிதிகள் மகாநாட்டுக்கு விஜயம் செய்தார்கள். பலதேச வாலிபர்களின் விஷயங்களைப் பற்றி விவாதித்து அவர்களின் எண்ணங்களையும் செயல்களையும் நேரியவழியில் செலுத்துவதே இம்மகாநாட்டின் நோக்கம்.

# ஸ்பெயினுக்கு அமெரிக்க உதவி

## கப்பல்களைத் தாக்க உத்தரவு

## ஸ்பானியப் புலவரின் பரிதாப மரணம்

### ஜெர்மானியரின் மருட்டல்

(வாரணன் திரட்டியது)

### ஸ்பானியக் கலகம்

ஸ்பானிய அரசாங்கத்தாரே அதிகமான வெற்றிகளைப் பெற்றுவந்தாரெனச் சென்றவாரம் கூறப்பட்டது. ஸ்பானியக் கலகத்தில் ஈடுபட்ட இரு தரத்தாருக்கும் ஒருவிதச் சமாஸம் உண்டாக்க மற்ற நாடுகள் முனைந்து நிற்கின்றன. இவ்விஷயமாக ஸ்பானிய அரசாங்கமும் சம்மதித்திருப்பதாகத் தெரிகிறது. பர்காஸ் ஜண்டாவோடு (ஸ்பானியக் கலகக்காரர் அரசாங்கம்) சமாதானம் பேச பாஸ்குவே மாகாணத் தலைவரை அரசாங்கம் நியமித்திருக்கிறது. ஒரு பக்கம் சமாஸ முயற்சிகள் நடந்துகொண்டிருக்க, மறுபக்கம் கலகமும் வளர்ந்துகொண்டிருக்கிறது.

கோர்டோ என்ற விடத்தில் பெருத்த சண்டை நடைபெற்றது. இருதரப்பிலும் உண்டான நஷ்டங்கள் பல. இவ்விடத்தில் அரசாங்கப் படைகளுக்கே வெற்றி கிடைத்ததாகத் தெரிகிறது. பிரிட்டிஷ் ஸ்தானிகர் இன்னும் மாட்ரிட் நகரத்திலேயே இருந்துவருகிறார். அங்குள்ள பிரிட்டிஷ் காலனியில் உணவு விஷயத்தில் சில கஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மார்செயில்லுக் கருகில் சாமான் ஏற்றிக்கொண்டு சென்ற ஓர் அரசாங்க லாரியின்மீது வெடியொன்று வீசப்பட்டது. ஆனல் இவ்வெடி லாரியை ஒன்றும் செய்யவில்லை. அமெரிக்காவிலிருந்து 45 லட்சம் டாலர் பெறுமானமுள்ள யுத்தத் தளவாடங்கள் ஸ்பானிய அரசாங்கத்தாருக்கு ஏற்றுமதிசெய்ய 'லைசென்ஸ்' தரப்பட்டிருக்கிறது.

### கலகக்காரர் மாண்டனர்

மாட்ரிட் நகரத்துக்குத் தெற்கே ஆரன்ஜுஸ் வட்டத்தில் கலகப்படைகளைத் தலைவாராவிலிருந்து மாட்ரிட் நகரத்துக்கு ஏற்றிச்சென்ற முப்பத்தைந்து ரயில்பெட்டிகளை அரசாங்கப் படைகள் தாக்கின. இதனல் கலகக்காரருக்குப் பெரியதொரு நஷ்டம் உண்டாயிற்று. தலைநகரிலிருந்த பிரிட்டிஷ் காலனியிலிருந்து ஐம்பது பேர் அலிகாண்டிக்கு மாற்றப்பட்டனர். தற்போது ஸ்பெயினில் தொத்துவியாதிகள் பரவுகின்றன. இந்நோய்களைப் போக்கச் சர்வதேச சங்கம் சில டாக்டர்களை அனுப்பச் சம்மதித்திருக்கிறது.

### புதுவருஷ ஆரம்பவெடி

புதுவருஷ ஆரம்ப விழா ஸ்பெயினில் நடைபெறுவது வழக்கம். நடு இரவில் கடிகாரம் பன்னிரண்டு மணி அடிக்கும்போது ஒவ்வொரு மணி ஓசைக்கும் ஒவ்வொரு திராட்சைப் பழம் சாப்பிடுவது வழக்கம். ஆனல் இவ்வருஷம் இது வேறு விதமாக முடிந்தது. ஒவ்வொரு மணி ஓசைக்கும் ஒவ்வொரு வெடியாகப் பன்னிரண்டு வெடிகளைக் கலகக்காரர் நகரின் நடுவில் எறிந்தனர்.

காடிஸ் துறைமுகத்தில் 5000க்கு மேற்பட்ட இதாலிய வீரர் வந்து இறங்கினர். இவர்கள் அனைவரும் செவயல் நகரத்துக்கு அனுப்பப்பட்டார்கள். ஒருநாள் இரவு கலகக்காரர் மாட்ரிட் மீது பல விஷவெடிகளை வீசினர். இதனல் ஏற்பட்ட கஷ்டங்கள் பல. பெண் மக்கள் கூட்டம் ஒன்றின்மீதும் வெடி வீழ்ந்தன. பல பெண்மணிகள் உயிர் துறந்தார்கள். காயம்பட்ட சிலர் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டார். ஸ்பானிய மாஜிமன்னர் ஆல்பன் ஸோவின் உறவினரான டியூக் ஆப் சந்தா எலினவின் அரண்மனை மீது மூன்று வெடிகள் வீசப்பட்டன. இதனல் ஒன்பது பேர் உயிர் துறந்தனர். பதினைந்து பேர் காயமடைந்தனர்.

### கப்பல்களைச்சுட உத்தரவு

சந்தேகம் தரக்கூடிய கப்பல்களைச் சுடுமாறு கலக அதிகாரி கட்டளை பிறப்பித்திருக்கிறார். ஸ்பானியக் கடலில் கடும்போர் நடக்கக்கூடுமெனத் தெரிகிறது. ஸியுடாவிலிருந்த மூன்று கப்பல்கள் உடனே புறப்படத் தயாராய் இருக்கவேண்டுமெனக் கோரப்பட்டிருக்கிறது. ஸியுடாவுக்கு ஏழு வியாபாரக் கப்பல்கள் மறிக்கப்பட்டுக் கொண்டு வரப்பட்டன.

### கப்பல்கள் தாக்கப்பட்டன

'பிளாக்கில்' என்ற பிரிட்டிஷ் கப்பல் மீது ஸ்பானியக் கலகக்காரர் வெடி குண்டுகளை வீசினர். இச்சம்பவம் கப்பல் கடற்கரையிலிருந்து ஏழு மைல் தூரத்தில் இருந்தபோது நடைபெற்றது. ஹெண்டாயி நகரத்திலுள்ள பிரிட்டிஷ் ஸ்தானிகர் இது விஷயமாகக் கலகக்காரர் அரசாங்கத்தைக் கேட்கக் கட்டளையிடப்பட்டிருந்தார். கலகக்காரர் மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர்.

### ஸ்பானியக் கப்பல் பிடிபட்டது

சென்றவாரம் 'பாலோஸ்' என்ற ஜெர்மானியக் கப்பலை ஸ்பானிய அரசாங்கப் படைகள் கைப்பற்றின என்றும் பிறகு அதைவிட்டுவிட்டன என்றும் கூறப்பட்டன. அக்கப்பலிலிருந்த ஒருவர் சிறையிலிடப்பட்டார். சாமான்கள் பறிமுதல் செய்யப்பட்டன. அதனல் ஜெர்மானியர் கிராஸ்வான் ஸ்பீ என்றஇடத்தில் 'ஆரகான்' என்ற கப்பலையும், கோயெனிக்ஸ்பர்க் என்ற விடத்தில் 'ஸோடோன்' என்ற இரு ஸ்பானியக் கப்பல்களையுங் கைப்பற்றினர். சிறை செய்யப்பட்ட ஜெர்மானியனையும், பறிமுதல் செய்யப்பட்ட சாமான்களையும் ஜனவரி மாதம் 8-ம் தேதிக்குள் கொடுத்தாலல்லது இக்கப்பல்களை விடுவதில்லையெனவும், இவ்விரு கப்பல்களும் பறிமுதல் செய்யப்படுமெனவும் ஜெர்மானியர் கூறுகிறார்.

### ஸ்பானியப் புலவர் மாண்டார்

ஸ்பானியக் கலகத்தின் பயனுக டான் மிருவல்டி உனமுனே என்ற ஸ்பானியப் புலவர் மாண்டார். இவர் தமது மாளிகையின் வெளி முற்றத்திலிருந்து ஜெர்மானிய வீரர் வரிசையாகச் செல்வதைக்கண்டார். ஜெர்மானியரின் இயற்கையான 'பூட்சு'கள் அதிக சப்தத்தை உண்டாக்கின. இவற்றைக் கண்ட புலவர் பெருமானது மனம் கோபாவேசம் கொண்டு "இவர்கள் ஸ்பெயினைத் தங்கள் சொந்தநாடாக எண்ணிக்கொடுமை செய்கிறார்கள். அவர்தம் பார்வையே என்னைக் கொல்கிறது" என்று கூறினர். இவர் இதே காரணமாக இறந்தார்.

### ஆங்கிலோ-இதாலிய உடன்படிக்கை

இங்கிலாந்துக்கும் இதாலிக்கு மிடையே மத்தியதரைக் கடல் சம்பந்தமாக ஓர் உடன்படிக்கை ஏற்பட்டிருக்கிறது. இவ்வுடன்படிக்கைக்கும் ஐரோப்பிய மாறுதல்களுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. பிரிட்டன், இதாலியின் அபிஸினிய வெற்றியை அங்கீகரிக்கவில்லை.

### யுத்தத் தடை முயற்சி

ஸ்பானியக் கலகத்தில் ஈடுபடக் கூடாதென ருஷ்யா, இதாலி, ஜெர்மெனி, போர்ச்சுகல் முதலிய நாடுகளுக்குக் கடிதங்கள் அனுப்பியதாகச் சென்றவாரம் கூறப்பட்டது. இக் கடிதங்களுக்கு ருஷ்யாவிலிருந்து மட்டும் பதில் கிடைத்திருக்கிறது. பிரிட்டன், பிரான்ஸ் கூறுவதுபோல செய்யச் சித்தமாக இருப்பதாக ருஷ்யா கூறுகிறது. மற்ற மூன்று நாடுகளும் பதில் தெரிவிக்கவில்லை.

### கலகத்தலைவர் மன்னிக்கப்பட்டார்

சீன உள்நாட்டுக் கலகத்திற்குக் காரணராயிருந்தவர் சாங்ஸூலியாங் என்பது யாவரும் அறிந்த ஒன்று. கலகம் சமாஸத்திற்கு வந்தபின் இவர் இராணுவச் சபையால் விசாரிக்கப்பட்டார். பத்து வருஷச் சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. இப்பொழுது இராஜாங்க சபை அவருக்கு மன்னிப்பளித்து விட்டது. ஆனல் ஐந்து வருஷங்கள்வரை எவ்விதப் பொதுக் காரியங்களிலும் ஈடுபடுதல் கூடாது. அரசாங்கக் கண்காணிப்பிலேயே அவர் வைக்கப்பட்டிருக்கிறார்.

## வித்தியாசம் வேண்டாம்!

### கிராமஉத்தியோகஸ்தர் மகாநாடு

கூடலூர் தாலுக்கா கிராம உத்தியோகஸ்தர் மகாநாடு சென்ற ஞாயிற்றுக்கிழமை திரு. எபி நேசர் தலைமையில் கூடிக் கீழ்க்கண்ட தீர்மானங்களை நிறை வேற்றியது.

கிராம உத்தியோகஸ்தர்களுக்குள் எவ்வித வித்தியாசமுமின்றி எல்லாருக்கும் 15 ரூபாய் சம்பளமளிக்கவேண்டுமென்ற சட்டத்தை இவ்வருஷமேஅமுலுக்குக் கொண்டு வருமாறு வேண்டல். கிராம உத்தியோகஸ்தர்களுக்குப் பஞ்சாயத்தார் இடும் உத்தரவுகள் கௌரவக் குறைவை உண்டுபண்ணுவதால் அவைகளை நீக்கல்.

சம்பளப் பிடிப்பு அனைவருக்கும் நீக்கப்பட்டுவிட்டதால் கிராம உத்தியோகஸ்தர்களுக்கும் அது நீக்கப்பட வேண்டல்.

## தஞ்சையில் புதிய அரசியல் கட்சி

தஞ்சாவூரில் புதுக்கட்சி யொன்று தோன்றி யிருக்கிறது. 'தஞ்சை ஜில்லா தீவிர வாதிகள் கட்சி' யென்று அதற்குப் பெயர். காங்கரஸுக்கு விரோதமாகவே அது வேலை செய்யும். அக்கட்சியின் அமைப்புக் கூட்டம் சென்ற வாரம் பட்டுக்கோட்டையில் நடைபெற்றது. காங்கரஸ் தேர்தல் அறிக்கை, பார்லிமெண்டரி போர்டு முதலியவைகளைக் கண்டித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. அக்கட்சித் தலைவர்: மாயவரம் 'வெற்றிமுரசு' ஆசிரியர், திரு. சி. நடராஜன்.

## ஓயாது பேசுபவன்

மெம்பிஸ் என்ற விடத்தில் எம்மி வில்ஸன் என்ற நான்கு வயதுப்பையன் ஓயாது பேசுகிறான். மூன்று வாரம் முன்பு அவன் ஸ்தல ஆஸ்பத்திரிக்குக் கொண்டுவரப் பட்டான். இரவு, பகல் எந்த நேரத்திலும் எதைப்பற்றியாகிலும் அவன் ஓயாது பேசிக் கொண்டேயிருக்கிறான். சில சமயம் அவன் சுய உணர்ச்சியுடன் இருக்கிறான். சில சமயம் உணர்ச்சியில்லை. மிகவும் திடகாத்திரனயிருந்த அச்சிறுவன் இளைத்துத் துரும்பாய் விட்டான். அவன் 20 பவுண்டு நிறையே யிருக்கிறான். டாக்டர்கள் திகைக்கிறார்கள்.

இவ்வாண்டு காங்கரஸில் 6, 36, 131 நாலணு அங்கத்தினர் இருக்கிறார். இவற்றில் நூற்றுக்கு அறுபத்தெட்டு பேர் கிராமவாசிகள். பெய்ஸ்பூர் காங்கரஸுக்குச் சென்ற பிரதிநிதிகள் 2,222 பேர். பீஹாரில்மட்டும் 1,04,473 அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். சென்ற வருஷத்தைவிட இவ் வாண்டில் 1,78,516 அங்கத்தினர் அதிகமாகச் சேர்ந்தனர்.

## உலக யுத்தம் எப்பொழுது?

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

பிரிட்டனில் கிடைக்கிறது. இவ்விஷயத்தில் பிரிட்டன் அமெரிக்காவுக்கு அடுத்தபடியா யிருக்கிறது. வேண்டிய அளவு இரும்பும் கிடைக்கிறது.

பிரிட்டிஷ் இராணுவப் படையும் ஆகாயப் படையும் வெளிநாடுகளிலிருந்து பிரிட்டனுக்கு விளைபொருள்கள் வற்றுமதியாவதை மற்ற நாடுகள் தடுக்காவண்ணம் பார்த்துக் கொள்ளும் என்று கூறப்படுகிறது. அப்படிப் பார்த்துக் கொள்ளுமாயின் பிரிட்டன் மற்றநாடுகளைவிட எவ்விஷயத்திலும் பின் வாங்காது என்பது மட்டும் உறுதி. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் எப்பொருள்களும் கிடைக்கின்றன. மலேயாவும், இலோனும் ரப்பருக்குச் சிறந்த நாடுகள். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் பெட்ரோலியத்துக்கும் பருத்திக்கும் சிறிது கஷ்டங்கள் ஏற்படல் கூடும். ஈரான், ஈராக், மெக்ஸிகோ முதலிய நாடுகளிலுள்ள சில எண்ணெய்க் கிணறுகளைப் பிரிட்டன் வாங்கி யிருப்பதால் எண்ணெய்க் கஷ்டமும் ஒருவாறு நிவர்த்தியாகும். இந்தியாவும், எகிப்தும் பருத்தியை விளைவிக்கக் கூடிய நாடுகளாக இருந்தாலும்அமெரிக்கப் பருத்தி தடுக்கப்படுமாயின் சிறிது கஷ்டம் உண்டாகும்.

### யுத்தம் சந்தேகமே

இவ்விதப் பொருளாதார நெருக்கடியில் உலக யுத்தம் ஆரம்பிக்கப்படுமாயின் சில நாடுகளின் கதி என்ன? வீம்பு பேசும் இதாலியும், ஜெர்மெனியும் வீண் கஷ்டங்களுக் குள்ளாகும். ருஷ்யா, பிரான்ஸ், கிரேட் பிரிட்டன் முதலிய மூன்று நாடுகளும் ஒன்றுசேர்ந்து இந்த இரண்டு நாடுகளையும் வெகு சீக்கிரம் அடக்கிவிடும்.

### ருமேனியா

உலக யுத்தம் வலுப்பதற்கு ருமேனியா ஒரு காரணமாக இருக்கலாம். அங்காட்டுமந்திரிசபையில் பெரியதொரு மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. அம் மாற்றத்தால் 'பாஸிஸ'த்துக்கு விரோதமான மந்திரி வெளியேறினர். புதிய அரசாங்கத்தில் ஜெர்மெனிக்கு ஆதரவு கிடைத்திருக்கிறது. ருமேனியா, எண்ணெய்க் கிணறுகளில் சிறந்தது. யூகோஸ்லேவியாவில் அதிகமாகக் 'குரோமிய'மும் 'பாக்ஸைட்'டும் கிடைக்கின்றன. செகோஸ்லோவாகியாவில் இரும்பு கிடைக்கிறது. இந்நாடுகள் ஜெர்மெனிக்கு உதவிபுரியக் கூடுவன. யுத்தம் தொடங்கப்படுமாயின் ஜெர்மெனி முதலில் லொரெயின் பிரதேசத்தின் மீது தன் நாட்டத்தைச் செலுத்தும். அப்பிரதேசம் ஜெர்மெனி வசமாயின் ஜெர்மெனிக்குத் தாதுப் பொருள்களைப் பற்றிய கவலையே இராது.

### ஒரு வருஷத்துக்கு யுத்தமில்லை

மேற்குறித்த காரணத்தால் உலக யுத்தம் சீக்கிரம் ஆரம்பிக்கக் கூடுமென்று சிலர் கருதுகிறார். அவ்வித எண்ணம் வேண்டுவதே இல்லை. இதாலி தற்போது ஒரு பெருஞ் சோதனைக்குட்பட்டிருக்கிறது. இதாலியைப்பொருளாதார நெருக்கடி வாட்டுகிறது. அந்நிய நாணயமாற்றில் ஜெர்மெனி பெரிதும் கஷ்டப்பட்டது. வேண்டிய உணவுப் பொருள்களும் சேமித்து வைக்கப் படவில்லை. அரசியல் வாதிகள் இதைக் கவனியாவிடினும் இராணுவ அதிகாரிகள் இதைக் கவனித்தே வருகிறார்கள். அதனால் இன்னும் ஒரு வருஷ காலம் வரை யுத்தம் தொடங்க இதாலியும் ஜெர்மெனியும் முன் வருமென்று கூறுவதற்கு இடமில்லை.

—'தி நேஷன்'

## ருஷ்யா நாஸ்திக நாடா?

### ருஷ்யாவின் முன்னேற்றங்கள்

### மற்றநாட்டு நாஸ்திகக் கூட்டத்தினர்

### உண்மைக் கிறிஸ்தவர் யார்?

(டாக்டர். எஸ். யாரோஸ்)

#### நாஸ்திக ருஷ்யா

ருஷ்யா என்றபோதே நாஸ்திகம் என்பது நம் நினைவுக்கு வருகிறது. 'ருஷ்யர் நாஸ்திகர்; கடவுள் நம்பிக்கை யற்றவர்; கேலித்தனமாகப் பேசுவதற்கே மதத்தைப்பற்றி நினைப்பவர்' என்று கருதப்படுகிறது. மத விஷயங்களெல்லாம் கட்டுக் கதையென்றும், கண்மூடி வழக்கங்களென்றும், மூடக் கொள்கைகளென்றும் ருஷ்யர் நினைக்கிறார். பணக்காரரிடமிருந்து மதத் தலைவர்கள் மதத்தைப் போதிக்கிறார்களாம். அமெரிக்காவிலுள்ள சிகாகோ நகரில் பெரிய கூட்டத்தினிடையே பேசியபோது ஒருவர் ருஷ்ய அரசாங்கத்தைக் "கடவுள் நம்பிக்கை யில்லாக் கூட்டத்தார்" என்றாராம். கூட்டத்திலிருந்தவ ரெல்லாரும் கைகொட்டி ஆரவாரம் செய்தார்.

உலகத்தில் நடக்கும் தர்க்கங்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு அறியாமையினாலேயே நடக்கிறது. இவ்வறியாமையைப் போக்க இதுவரை எவரும் முன்வந்ததில்லை.

#### நாஸ்திகக் கூட்டத்தார்

ருஷ்ய தேசத்தின் தலைநகரான மாஸ்கோவுக்கும் வேறொரு பெரிய நகரான லெனின்கிராடுக்கும் போய் இருந்தேன். அங்கு நான் அநேக விசேஷங்களைக் கண்டேன்; மத விஷயத்தில் வெறுப்பும் மாஸ்கோவில் நாஸ்திகக் கண்காட்சிச் சாலையொன்றையும் கண்டேன். நான் அநேக ருஷ்யரோடு வாது செய்தேன். அவர்களில் ஒருவராவது கடவுள் நம்பிக்கையுடையவராக இல்லை. பொதுஉடைமைக் கொள்கைக்கே தங்கள் வாழ்நாளைக் கழிப்பதாகவும், தங்கள் வாழ்க்கைக்குக் கடவுள் உதவியே வேண்டுவ தில்லை என்றும் அவர்கள் கூறுகிறார்கள். ஐரோப்பாவிலுள்ள சில நாடுகளிலும் அமெரிக்காவிலும் ஒரு கூட்டத்தார் பொதுஉடைமைக்கும், சம தர்மத்துக்கும், மதத்துக்கும் உள்ள சம்பந்தத்தை அறியாமல் இருக்கிறார். சமதர்ம வாழ்வுக்கு மதக்கொள்கைகள் அவசியமில்லை யென்பதே இவர் தம் அபிப்ராயம். பணக்காரருடைய கொடுமையினாலேயே சமதர்மம் தோன்றிற்றே தவிர மதக் கொள்கையில் சமதர்மம் இல்லையென்று இவர் கூறுகிறார்.

#### லெனினின் மேற்கோள்

ஒரு சமயம் இங்கிலாந்து தேசத்து ஜார்ஜ் லான்ஸ்பரி, லெனினைக் கண்டபோது "போல்ஷ்விஸக் கொள்கை இயேசு நாதருக்கும் அவர்தம் மெய்யடியார்க்கும் தாழ்வை யுண்டாக்கிவிட்டது" என்று குறைகூறினாராம். இதைக் கேட்ட லெனின் "ஜார்ஜ்! உம்முடைய நாட்டுக்குச் சென்று உமது நாட்டவரை அம்மதத்தைப் பற்றியிருக்கச் செய்க. பிறகு எங்கள் நாட்டுக்கு வந்து எங்கள் மதத்தைப்பற்றிப்பேசுக" என்று கூறினர். இதை முன் கூறப்பட்ட கூட்டத்தார் தமக்குரிய துணையாகக்கொண்டுள்ளார்.

நாஸ்திகர் யார்? ருஷ்யப் பொதுஉடைமைக்காரரே கடவுள் நம்பிக்கைக் கொண்டவர் என்று ஏற்படுகிறது. ருஷ்யாவில் மக்கள் சந்தோஷமாக வாழ்கிறார்கள். கிழப்பருவ உதவிச்சம்பளங்கள் தரப்படுகின்றன. வேலையற்றோருக்கும் உதவிகள் கிடைக்கின்றன. தனிப்பட்டவர் லாபம் பெறுவதில்லை. ஆண் பெண் வித்தியாசம் இல்லை. குழந்தைகள் சுகாதாரம் காக்கப்படுகிறது. கல்வி எல்லாருக்கும் வழங்கப் படுகிறது. எப்பொருளும் பாழாகாத வழியில் பயன்படுத்தப்படுகின்றது. கடவுள் நம்பிக்கையைவிட இச்சீர்திருத்தங்கள் போற்றக் கூடியன வல்லவா?

#### மதமாவது என்ன?

இறுதியாக மதமாவது என்ன? எல்லாமதமும் சொல்வது ஒன்றே. எல்லா வேதங்களும் ஓர் உண்மையையே கூறுகின்றன. அவ்வுண்மை யாது? மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் அன்புடையவராக இருத்தல் வேண்டும் என்பது. பிறர் முன்பு தாழ்மையாக நடத்தல் வேண்டும். இயேசுநாதர் கூறுவதும் இதுவே. செயின்ட் ஜேம்ஸும், புத்தரும் கூறுவது இதுவே. 'நியாயமாக இரு. தர்மம் செய். பிறரை நேசி. அவருக்கு உதவி செய். அடக்கமாகவும் செட்டாகவும் வாழ முயல்.' இவையே எல்லா மதங்களுடைய போதனைகள். இவைகளில் வித்தியாசம் இல்லை.

நாம் கடவுளை நேசிக்க வேண்டுவது உண்மையே. ஆனல் நம்முடைய அறிவோ ஒரு கட்டுக்குட்பட்டது. அவர் அக்கட்டுக்கு அப்பாற்பட்டவர். அவருடைய உருவம் இன்ன தென்பதை நாம் அறியோம். அவருடைய புகழ்களை வாயாரப்பாடுவதால்ஒருவாறு அவரை மகிழ்விக்கலாம். எனினும் இது குழந்தைநிலையே. அதனல் பெரியோர் கூறிச்சென்றது என்ன? தன்னலத்தையொழித்துப் பணிசெய்வதையே நம் கடமையாகக் கொள்ளுதல் வேண்டும். இதுவே கடவுளிடத்து அன்பு காட்டுவதாகும்.

#### ருஷ்யாவின் மதம்

பணி, சமஉரிமை, நியாயம், தனிப்பட்டவர் சுதந்திரம் முதலியவற்றைத் துணையாக்கொண்டு ஓர் உலக சாம்ராஜ்யத்தை நிலைநாட்ட ருஷ்யா முயல்கிறது. இதுவே அவ்வரசாங்கத்தின் முக்கிய நோக்கம். ருஷ்யாவில் பொதுஉடைமைச் சர்வாதிகாரம் நிலைத்திருக்கிறது. நாம் சர்வாதிகாரத்தை வெறுக்கிறோம். சர்வாதிகாரத்தைச் சிறிது சிறிதாகவே மாற்றுதல் வேண்டும். ஆனல் இச்சீர்திருத்தங்களெல்லாம் கடவுள் நம்பிக்கைக்குத் துணைசெய்யுமா? இச்சீர்திருத்தங்களெல்லாம் நாஸ்திகத்தின் பாற்பட்டனவேயென்று கருதப்படுகின்றன,

ருஷ்யதேசத்து அறிஞர் ருஷ்யா எக்காலத்தும் கிறிஸ்துவ நாடாக இருக்கவில்லை என்று கருதுகிறார். அங்குக் கண்மூடி வழக்கங்களே மல்கிக் கிடந்தன. அங்குக் கிறிஸ்தவ மதத்துக்கும் அரசாங்கத்துக்கும் எவ்விதத் தொடர்பும் இதுவரை இருந்ததில்லை. கிறிஸ்தவமதமே அந் நாட்டில் இருந்ததில்லை என்று கூறும் போது கிறிஸ்தவமதத்தை ருஷ்யர் கை விட்டனர் என்ற குற்றத்தை எவ்வாறு அவர்கள் மீது சாட்டுதல் கூடும்? அவர்கள் கண்மூடி ஒழுக்க வழக்கங்களை அறவே ஒழித்து விட்டார்கள். இன்று அவர்களுடைய செயல், சட்டம், நோக்கம் முதலியவைகளைக் கண்டு அவர்களே உண்மைக் கிறிஸ்தவர்கள் என்று கூறுதல் வேண்டும். இயேசு நாதருடைய ஒரு போதனையையாவது கண்டுபிடியாத மற்ற நாட்டாரைக் கிறிஸ்தவர் என்று கூறலாமா? இவர்கள் பசுத்தோலைப் போர்த்த புலிகளே யாவார்கள். இவர்தம் நம்பிக்கை, நடைமுதலியனவாவது கிறிஸ்தவ மதத்துக்குப் பொருத்தமாக இருக்கின்றனவா? அதனல் மற்ற நாட்டவர் ருஷ்யாவுக்குச் சென்று கிறிஸ்தவ மதத்தைப் போதிக்க வேண்டுமென்று கூறுதல் பொருந்தாத ஒரு கூற்றே.

—'யூனிடி'

## நிர்வாண விபசாரிகள்

### அமெரிக்காவில் துர்நடத்தை

#### மாணவர்கள் முயற்சி

அமெரிக்காவில் விபசாரம் அதிகமாகப் பெருகிவிட்டது. குபெக் சர்வகலாசாலை மாணவர்கள் ஒன்று கூடினார்கள்; விபசாரத்தையும் தீச் செயல்களையும் ஒழிப்பதென்று கங்கணங் கட்டிக் கொண்டார்கள்; அதற்கென்று ஒரு சங்கத்தையும் ஆரம்பித்தார்கள். அங்காட்டு நீதிபதி ஒருவர் அதிகாரிகள் தங்கள் கடமையைச் செய்வதில்லை யென்று சமீபத்தில் குறை கூறினர். அதிகாரிகளாலும் செய்யமுடியாத வேலையை மாணவர்கள் செய்துவிடுவதென்று முன் வந்தார்கள். சில நாட்கள் முன்பு அவர்கள் அங்குள்ள விபசார விடுதிகளுக்குள் நுழைந்தார்கள்; அங்கு ஆடையின்றிக் கிடந்த ஆண்களையும் பெண்களையும் அடித்தார்கள். விபசாரத்திற் குட்பட்டவர்களை அம்மாணவர்கள் அப்படியே நிர்வாணமாக நடுத்தெருவில் இழுத்துவந்து அவமானப் படுத்தினர்கள். விபசார விடுதிகளை வைத்து நடத்தியவர்கள் கட்டில்களின் அடியிலும் கதவுகள் மூலையிலும் ஒளிந்து கொண்டார்கள். இந்த வேடிக்கையைப் பார்க்க ஏராளமான மக்கள் கூடிவிட்டார்கள். விபசாரிகள் இவ்விதம் நிர்வாணமாகத் தெருவில் இழுக்கப்படுவதைக் கண்ட வாடகை மோட்டார் ஓட்டிகள் மாணவர்களுடன் சண்டையிட ஆரம்பித்தார்கள். ஆனல் போலீஸார் வந்து சமாதானம் செய்தனர்.

அவ்வியக்கத்தின் காரணரான மூவர் மீது வழக்குத் தொடரப்பட்டது. இதைக்கண்ட அந்த நகரத்துப்பிரமுகர்களும், வக்கீல்களும், மாணவர்க்குதவியாக வழக்கு நடத்த முன்வந்தார்கள்.

இவற்றை யெல்லாம் விட மிகவும் கொடிய பழக்கம் ஒன்றிருக்கிறது. பள்ளிகளில் படிக்கும் மாணவிகளில் பலர் விபசார விடுதிக்குச் சென்று மானத்தை விற்றுப் பொருள் சம்பாதித்து வாழ்க்கை நடத்துகிறார். இதை அவர் தம் பெற்றோர் அறிகிறாரில்லை. கௌரவமான குடும்பங்களைச் சேர்ந்த பெண்கள் இவ்விதம் சீரழிகிறார்கள்.

இவைகளை ஒழிக்கவேண்டுமென்பதே மாணவர்களின் நோக்கம். உலகமெங்கும் இவ்விபசாரம் பரவி வருகிறது. இதை ஒழிக்க ஓர் உலக இயக்கமே ஏற்படவேண்டும்.

—"நியூஸ் ஆப் தி வொர்ல்ட்"

## 333 பேர் மாண்டனர்

### சுரங்க விபத்துக்கள்

சென்ற பதினெட்டு மாதங்களில் நம் நாட்டில் கீழ்க்கண்ட சுரங்க விபத்துக்கள் ஏற்பட்டிருக்கின்றன:—

1935-ம் வருஷம் ஜூன் மாதம் பரடிஜி சுரங்கத்தில் ஏற்பட்ட விபத்தில் 19 பேர் மாண்டனர். பலர் காயமடைந்தனர்.

1935-ம் வருஷம் ஜூலை மாதம் ஜோத்திபாத் சுரங்கத்தில் விபத்து ஏற்பட்டது. 62 பேர் மாண்டனர். 14 பேருக்குக் காயம்.

1936-ம் வருஷம் ஜனவரி மாதம் லோயாபாத் சுரங்கத்தில் விபத்து உண்டாகி 37 பேர் இறந்தனர். 23 பேர் காயமடைந்தனர்.

1936-ம் வருஷம் ஜூலை மாதம் அட்ஜா சுரங்கத்தில் விபத்து ஏற்பட்டது. ஐவர் உயிர் நீத்தனர்.

1936-ம் வருஷம் செப்டம்பர் மாதம் நிருபத்ரா என்ற விடத்தில் [illegible] சரிந்து விபத்துண்டாயிற்று. இருவர் மாண்டனர்.

1936-ம் வருஷம் டிசம்பர் மாதம் 18-ந் தேதி அஸன்ஸாலுக் கருகில் உள்ள பாய்தி சுரங்கத்தில் விபத்துண்டாயிற்று. 208 பேர் அதில் புதையுண்டனர்.



## தமிழ்த் திருநாளைக் கொண்டாடுக

### புன்மைக்கிளர்ச்சிகளை ஒழிக்க

#### ஒரு வேண்டுகோள்

(வித்துவான். திரு. இ. சிவகுருநாதன்)

தைத்திங்கள் முதல் வாரத்தில் சில ஆண்டுகளாகத் தமிழ்த்திருநாள் கொண்டாடப்பட்டு வருகின்றது. அண்மையில் தைத்திங்கள் பிறக்கப்போகின்றது. அத்திங்கள் முதல் வாரத்தில் தமிழ்த் திருநாளைக் கொண்டாடுமாறு அனைவரையும் வேண்டுகின்றேன். சென்ற ஆண்டுகளிலெல்லாம் ஒரு சிலரே விழாவைக் கொண்டாடினர். சிலர் மட்டும் விழாவைக்கொண்டாடின் போதாது. தமிழ் நாட்டின் கண், பிறந்தும், வளர்ந்தும், வாழ்ந்தும் வருகின்ற அனைவரும் விழாவைக்கொண்டாட வேண்டும். அன்றுதான் தமிழ் மொழி தழைத்தோங்கும்.

#### தமிழ் நாட்டவர் கடமை

தமிழ் நாட்டவருக்குத் தாய் மொழி தமிழாகும். தமிழைப்போற்ற வேண்டுவது தமிழ் நாட்டவர்கடமையுள் தலையாய தொன்றாகும். நாகரிகம் பெற்ற நாடுகளை நோக்குங்கள்! எந்நாடேனும் மொழி வளமின்றி முன்னேற்றம் அடைந்ததுண்டா? இல்லை. ஒவ்வொரு நாடும் தன் தாய் மொழி வளத்தால் தான் முன்னேற்ற மடைந்துள்ளது.

உலக நிகழ்ச்சியைக் காணுங்கள்! இன்றைய உலகில் குடியாட்சிக்கும்—முடியாட்சிக்கும் போர் நிகழ்கின்றது. வெற்றிபெறுவது முன்னையதா? பின்னையதா? முன்னையதே வெற்றியுறும். என்னை? உலகத்திலுள்ளார் பலரும் குடியாட்சியை விழைகின்றனர். ஆதலின் வருங்கால உலகில் குடியாட்சியே நிலை பெறுவதாகும்.

இந்தியாவும் குடியாட்சியை விரும்புகிறது. அக்குடியாட்சியை நலம் பெற நடாத்த நாம் மக்களைப் பலவழிகளிலும் பண்படுத்த வேண்டும். பண்படுத்தற்குரிய வழிகளோ பற்பல. அவற்றுள் தலையாயது தாய் மொழிவாயிலாகக்கலையறிவைப் பெருக்குதலும், நாட்டுப்பற்றை ஊட்டுதலுமாகும். இந்தியாவில் வழங்கிவரும் தாய் மொழிகள் பல. இந்தியா நலமுற வேண்டுமேல் தாய் மொழிகளும் வளமுறவேண்டும்.

#### வங்கரும் ஆந்திரரும்

இன்று, இந்தியாவில் சிறந்து விளங்கும் மொழிகள் சிலவே. எடுத்துக்காட்டாக வங்காளத்தைக் காணுங்கள்! வங்க மொழி நாடொறும் பிறையென வளர்ந்து வருகின்றது. கலைகள் கடலெனப் பொங்கிப் பெருகுகின்றன; இளைஞர்களும் அறிஞர்களும் தமது மொழியைக் கங்கணங் கட்டிக்கொண்டு காப்பாற்றி வருகின்றார்கள். அடுத்துள்ள ஆந்திர நாட்டைப் பாருங்கள். ஆந்திரர்களின் முயற்சியால் அம் மொழிக்கெனத் தனிப்பல்கலைக் கழகம் ஒன்று விளங்குகின்றது. ஊர்கள் தோறும் படிப்பு மன்றங்களும், நூல் நிலையங்களும் மல்கியிருக்கின்றன?

#### தமிழர் நிலை

இவ்வாறாக, இந்தியாவில் சிலமொழிகள் மட்டும் சிறந்து விளங்குவதோடமையாது, பல மொழிகளும் சிறந்து விளங்கவேண்டும். அதுகாலையே நாடு நலனுறும்; கருதிய பலன்களும் கைகூடும். ஈண்டு நமது தமிழ் நாட்டை எடுத்துக் கொள்வோம். தமிழ் நாட்டின் தாய் மொழி எந்நிலையிலுள்ளது?

தாய்மொழி மிகவுந் தாழ்ந்த நிலையிலிருக்கின்றது. காரணம் என்னை? காரணம் பலபடக் கூறலாம். சிறப்பாகக் குறிக்கத் தக்கது தமிழ் மக்கட்குத் தாய் மொழியில் கண்ணுங் கருத்துமின்மையேயாம். தமிழர்கள் தமிழை மறந்து வாழ்கின்றார்கள். அம்மறதியால் விளைந்து வருங் கேடுகள் பலவாகும். அவற்றைக் கண்டும் நாம் வாளாவிருத்தல் நன்றோ!

தமிழைப் போற்றுந் தகுதி தமிழ் நாட்டவருக்கில்லையா? உண்டு. தமிழ் நாட்டின்கண் சிறந்த செல்வந்தர்கட்குக் குறைவில்லை; நிறைந்த அறிஞர்கட்குப் பஞ்சமில்லை. எல்லோரும் மிகுந்து வாழ்கின்றனர். தமிழ்மொழியும் உலக ஒழுக்கத்திற்கும் அறிவு வளர்ச்சிக்கும் தக்கதாக விளங்கி வருதல் கண்கூடு.

இத்தகைய நலம் வாய்ந்த தமிழுக்கு யாண்டேனும் ஒரு தமிழ்ப் பள்ளிக் கூடம் தனியே உண்டா? படிப்பு மன்றங்கள் இருக்கின்றனவா? நூல் நிலையங்கள் தோன்றி யுள்ளனவா? மொழிபெயர்ப்புக் கழகங்களும் கலை வளர்ச்சிக் கூடங்களும் இருந்து வருகின்றனவா? இல்லை; இல்லை. கோடிக் கணக்கான தமிழர்கள் வாழுமிடத்தில் தமிழுக்கெனத் தனிப் பள்ளிக் கூடம் இல்லையெனில் அது நமக்குத் தாழ்வில்லையா? நாகரிகம் பெற்ற நாடுகளுடன் நாமும் ஒருவரெனத் தலை தூக்கி நிற்க முடியுமா? அன்பர்களே! சிந்தித்துப் பாருங்கள்! இக்குறைபாடுகளை யாண்டு முறையிடுவது? எவரிடம் சென்று சொல்லுவது? நமது மொழியைப் பிறர் போற்ற முன் வருவரோ? நாமல்லவோ நமது மொழியைப் போற்றல்வேண்டும்? நாமனைவரும் ஒன்றுகூடி முயலின் தமிழை உயரிய நிலைக்குக் கொண்டுவரலாம். இன்று மிகவும் அருமையாக ஓரோவிடங்களில் தோன்றியுள்ள தமிழ்ச்சங்கங்களும் பிறவும் சிறிதளவே தொண்டாற்றிவருகின்றன. இவை போதா. பலவிடங்களிலும் பற்பல சங்கங்களும் பிறவும் தோன்றித் தமிழ் மொழியைப் பல வழிகளிலும் வளர்த்தல் வேண்டும்.

#### தடை செய்வோர்

ஒரு சிலர், தனித்தமிழா—கலப்புத் தமிழா, கலைச்சொல் லாக்கத்தினைக் கொள்ளுவதா - தள்ளுவதா, (ஒருசிறந்த முதிய தமிழ்ப் புலவர் "சொற் பொழிவு" என்ற சொல் இன்று தோன்றியது. அதை வழங்கல்கூடாதென அறிவுறுத்துகின்றார்.) தமிழ் மொழி, தானே தோன்றியதா—பிற மொழியினின்றும் பிறந்ததா, திருக்குறள் முதனூலா—மொழிபெயர்ப்பு நூலா, "பால், சோறு" என்ற சொற்கள் தமிழா—வட மொழியா, (ஒரு பல்கலைக்கழகத் தமிழாசிரியர் இவ்வாராய்ச்சியை மேற் கொண்டுள்ளார்.) இன்ன பல சிறுமைக்கிளர்ச்சிகளை எழுப்பிப் போரிடும் அளவோடு நின்று மொழிவளர்ச்சிக்குத் தடைசெய்கின்றனர்.

இத்தகைய சிறுமைக்கிளர்ச்சிகளையெல்லாம் களைந்தெறிந்து, தமிழில் கலைகளைப் பலவகைகளிலும் பெருக்கித் தமிழ் நாட்டவரைத் தட்டி எழுப்பும் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு மொழியை வளர்க்க முற்படவேண்டும். இக்குறிக்கோளைப் பரப்பும் வழிகளுள் திருவிழாக் கொண்டாடுதலும் ஒன்றாகும். பலரும் தத்தம் கொள்கைகளைப் பரப்பத் திருவிழாக் கொண்டாடுதலைக் காண்கிறோமல்லவா! ஆதலின் நாமும் தமிழ்த்திருநாளைக் கொண்டாடித் தமிழைவளர்க்க வழிகோலுவோமாக.

## டாக்டர் உதைபட்டார்

டென்மார்க்கில் தாம்ஸன் என்பவர் ஒடிந்த ஒருவர்காலை ஆபரேஷன்செய்து கொண்டிருந்தார். நரம்பு சுருங்கியதால் அந்த மனிதன் ஸ்மரணையின்றித் தன் காலால் ஓங்கி உதைத்தான். டாக்டருக்கு மூளைகலங்கி விட்டது; உணர்வற்றுக்கீழே சாய்ந்தார். மற்றொரு டாக்டர் வந்து அந்த நொண்டிக் கால் மனிதருக்குச் செய்யப்பட்டிருந்த ஆபரேஷனைப் பூர்த்தி செய்தார்.

# தமிழரே! ஒன்றுபடுக

## திருக்குறள் போதனை

(திரு. சிவத்தியானந்த மஹரிஷி)

### திருக்குறள்

பிறரைக் குற்றம் கூறுவதைவிட்டு நம்மையே நாம் திருத்திக்கொண்டொழுகுவதற்கான முறைகளைக் குறிப்பது குறள் நூல். அரசாங்கத்தார் நம்மைப் பிரித்தாளுகிறார்களென்றும் இல்லாவிடில் நாம் ஒற்றுமையாயிருப்போமென்றும் சிலர் கூறிக்கொண்டே ஒன்றும் செய்யாதிருக்கிறார். வேறு சிலர் தமது சுயநலத்தையே கருதி ஏனையோரை ஏமாற்றி ஒழுகுகிறார். நம் தமிழ்நாட்டிலேயே ஒழுக்கத்திற் சிறந்த குறள் நூல் தோன்றியது. அதற்கிணையான நூல் வேறெந்த பாஷையிலும் இல்லை என்பது ஒருபுறமிருக்க, தமிழ்ப்பாஷாபிமானிகள் அதன் பெருமையைக் கூறிக்கொண்டே அதில் விரித்துரைக்கப்பட்டுள்ள ஓர் ஒழுக்கத்தையாவது அநுஷ்டியாமல் நடக்கிறார்கள். இவர்கள் நமது நாட்டின் முன்னேற்றத்திற்கு ஒரு சிறிதும் உதவாதவர்கள் என்பது மாத்திரமல்ல, நாட்டு விரோதிகளென்றும் தைரியமாகக்கூறலாம். திருவள்ளுவர் தமது நூலை எழுதியபோது அவர் காலத்திருந்த ஜாதிக் கட்டுப்பாடு மதக்கட்டுப்பாடு முதலியவற்றை எவ்வளவு தூரம் சிக்கறுத்து ஒழிக்கவேண்டுமோ அவ்வளவு தூரம் ஒழித்து மனிதன் என்ற பொதுநிலையில் நின்று தமது நூலை வகுத்துள்ளார். அதுவே உண்மையாக ஒவ்வொருவரும் கொள்ள வேண்டிய நிலையாகும்.

### சமரச நோக்கு

பிறப்பினால் நாம் சில கட்டுப்பாடுகளுக்குள்ளே யிருந்து தீர வேண்டியிருக்கிறது. ஒருவன் பிறமதங்களிலுள்ள ஏற்றத்தைக் கண்ணாரக் கண்டாலும் தன் மதத்தை விடமுடியாமலிருப்பதன் காரணமென்ன? தான் சிறுவயதிலிருந்து பழகிய பழக்கங்களின் முறுக்கு நிலையே அவனைத்தான் பிறந்த மதத்திலும் ஜாதியிலும் நிறுத்துகிறது. இதனையே சாந்தலிங்கர் தமது அவிரோத வுந்தியாரில் விளக்கிக் கூறியுள்ளார். திரு. போப் திருவாசகத்தை மொழி பெயர்த்து அச்சிட்டகாலத்தில் சைவத்தின் ஏற்றத்தை அச்சைவத்திற் பிறந்த அறிவாளியினும் அதிநுல்லியமாக எடுத்துக் காட்டியுள்ளார். ஆயினும் அச்சைவவுணர்ச்சியானது அவரது மதத்தை மாற்றிவிட்டதோ வென்று நண்பர்கள் சந்தேகிக்கலாகாதென்றஞ்சி அவர் தாம் கிறிஸ்தவ மதத்தைக் கைவிடவில்லையென்று சமாதான மொழிகள் எழுத வேண்டி வந்தது. அதுபோலவே 'ஆசிய ஜோதி' என்று புத்த சரித்தையை எழுதிய ஸர் எட்வின் ஆர்னல்டு என்பவர் 'உலக ஒளி' என்ற பேரில் கிறிஸ்துவின் சரிதத்தையும் எழுத வேண்டியதாயிற்று. இவை போன்ற விஷயங்களைக் கவனிப்பின் பிறமதங்களும் ஒழுங்கான நல்ல நெறிகளைப் போதிப்பதில் வல்லன வென்று நன்கு தெரியவருகிறது. பிறமதங்களின் தெளிவுணர்ச்சி தன் மதத்திலுள்ள செருக்கையடக்கவல்லது. ஆனதுபற்றியே சில குறுகிய வுணர்ச்சி வாய்ந்த மதபோதகர்கள் இதர மதக் கொள்கைகளைப் படிக்கலாகாதென்கிறார்கள். ஆனால் மதங்கள் ஒரு பெரிய மேடையில் ஏறிநிற்பதற்கேற்பட்ட பல சோபானங்கள் அல்லது படிக்கட்டு வரிசைகள் என்ற விஷயத்தை யாரும் மறக்கலாகாது. அதனை மறவாதார்க்கு விட்டுக் கொடுக்கும் புத்தி தானே வரும். அப்படி விட்டுக் கொடுத்து நடப்பதனாலேயே மனித சமூகம் இடர்ப்படாமல் வாழமுடியும். இவ்விஷயத்தை ஒவ்வொருவரும் மனத்தில் நன்றாகப் பதிய வைத்துக் கொண்டால் பொது நலத்துக்காக உழைக்கும் சமயத்தில் அது பேருதவி செய்யும்.

### கூட்டுறவு வாழ்க்கை

மனிதன் தானாகவே தனித்திருந்து வாழ்த லென்பது முடியாத காரியம். அதனால் பலதிறப்பட்ட கோட்பாட்டினரும் ஒத்து வாழ்வதற்கான குறைவான நிபந்தனைகளைத் தங்களுக்குள் ஒழுக்கமுறையாக அமைத்துக் கொண்டு வாழ முயல்வது சிறந்த நெறியாம். அதுவே ராஜீய ஒற்றுமைக்கு ஆணித்தரமான கொள்கையாம். இக்கொள்கையைக் கைப்பற்றி நடக்க வேண்டுமென்றே திருவள்ளுவர் தமது நூலை எழுதினாரென்று கூறுவதில் விரோதமொன்றுமில்லை. அத்திருவள்ளுவர் குறள் சுமார் இரண்டாயிர வருஷ காலமாகப் பிரசாரிக்கப்பட்டு நிற்கும் இத்தமிழ் நாட்டில் ஒற்றுமை இல்லையென்றால் - நாட்டின் முற்போக்குக்கான கொள்கைகள் அநுசரிக்கப்படவில்லையென்றால் - இதை விடத் தமிழர்களுக்கு என்ன கேவலநிலை வேண்டும்? அதனால் ஒவ்வொரு தமிழனும் சாதிபேத வேறுபாடில்லாதிருந்த ஒருகாலத்தைத் தனக்குள் கருதி புணர்ந்து அந்நிலையில் தன் முன்னோர் எப்படி ஒற்றுமைப்பட்டு வாழ்ந்தாரோ அப்படியே தானும் வாழவேண்டுமென்ற எண்ணங் கொள்வானாயின் நாளைக்கு நமது நாட்டுநிலை உயர்வடைந்துவிடும்.

### தாய் நாடு

விவிலிய நூலைத் தமிழிலும், குர்ஆனைத் தமிழிலுமே கற்று ஆண்டவனை ஜபித்தால்போது மென்றிருக்கும் தமிழக்கிறிஸ்தவர்களும் இஸ்லாமியரும் யாராவது தமிழ்நாடு நம்நாடு என்பதை மறந்திருக்க முடியுமா? தம்முடைய சுயநாடு தமிழ்நாடு என்பதை மறந்து இந்நாட்டிலுள்ள அந்நியர்கள் தாங்களென்று பாவிப்பார்களா? அல்லது வேதாந்த சித்தாந்திகளாகிய இந்துக்கள் தங்களுக்குச் சாசுவதமான மோட்ச இடம், கைலாசம், வைகுண்டமென எண்ணித் தாங்கள் உள்ள உலகத்தை வெறும் சந்தைக் கூட்டத்திற் சேர்த்துள்ள மனிதர்கள் கருதுவது போலக்கருதுவார்களா? சக்தி எப்பொழுது உண்டாகும்? இங்கு அவர்களுக்கு ஒரு சுகமுமில்லையான போது மேலே மோட்ச வைகுண்டங்களிலா அவர்களுக்குச் சுகம் வரப்போகிறது? இங்கு உற்றபடி அங்கும் என்பதல்லவோ பெரியார் மொழி. உடலோடு சுவர்க்கத்தைக் காண முடியாதவன் உடலைவிட்ட பின் அச்சுவர்க்கங்களைநிச்சயம் காணவேமாட்டான். அதனால் மதவாதிகள், மதங்கள் தங்கள் மனங்களைக் கவ்விக் கொள்வதன்முன்பு சகோதரர்களாக விருந்தார்களென்பதை யுணர்ந்து மதமும் மற்றப்போர்வைகளைப்போன்ற ஒரு போர்வை என்பதைத் தெரிந்து நடப்பார்களாயின் ஒற்றுமை தமிழரிடை வராமற்போகுமா? ஓர் ஆங்கில அரசியல் முறையை எடுத்துக் காட்டாகக் கூறுவல். ஆங்கிலர்களுக்குள்ளும் வகுப்புகள் பலவுண்டு. அவை பிறவிக் கூறுகக்கருதப்பட்டு வருகின்றன. ஒரு பிரபு ஏழைப்பெண்ணை மணக்க உடன்படான். ஒரு காதோலிக்கனே குவேகரோ (Quaker) பிரோடஸ்டண்டு மதத்தை வெறுப்பான். ஆனால் நாட்டுக்கு அழிவு நேரப்போகிறது என்பதை யுணர்ந்த தட்சணமே இம்மூவரும் ஒன்று கூடிக்கொண்டு வந்த வெளிப்பகைவனை ஊரைவிட்டு ஓட்டி விட்ட பிறகே உட்பகையை வெளிக்காட்டுவர். இதனையே சரித்திரம் தேசிய ஒற்றுமை யெனக் கூறும். இதனையே நாமும் அநுஷ்டிக்க வேண்டியவர்களாவோம். நம்முள் வேறுபடும் சமயம் சிலவிருக்கலாம். அது நமது நாட்டுநிலையை அழித்து நம்மை அடிமைகளாக்கப்பிறர் முயலும் காலத்தில் காட்டத்தக்கதன்று. மகா ஜனங்கள் என்ற பேரே போய் நாம் பிரிட்டிஷ் குடிகள் என்று எழுதினால்தான் வாழலாம் என்ற காலத்தை நமக்குத் தற்கால அரசியல் ஏற்படுத்தியுளது. பிரிட்டன் தற்காலம் முதன்மை வாய்ந்த குடியேற்றநாடு என்று கூறும் இலங்கையை ஆள்வதற்கு இந்தியச் சேனையும் செல்வமுமே காரணம். தொகுவாய்ப்பகுதிகளென்றும் ஐக்கிய மலாய் நாடுகளென்றும் கூறப்படும் மலேயாவை ஆங்கிலர் கைப்பற்ற இந்தியாவின் பணமே உதவி செய்ததென்று ஆங்கில நூல்களே கூறுகின்றன. தென்னாப்பிரிக்கா, பிஜி, கிழக்காப்பிரிக்கா முதலிய இடங்கள் இந்தியர்களது உதவியில்லாமலிருந்திருந்தால் ஆங்கிலர் வசப்பட்டிருக்குமா? சீன மதத்திற்கு இந்தியப் பணமும் சேனையும் உபயோகமாகவில்லையா? இவற்றால் இந்தியாவுக்கு இம்மியளவு பிரயோஜனமுண்டா? நாம் செலவைப் பற்றிக்கூட அவ்வளவு கவலைப்படுவதில்லை. 'பொறை யொருங்கு மேல் வருங்கால் தாங்கி இறைவொருங்கு வேந்தர்க் களிப்பதே நா'டென்பது நமக்கு நன்றாகத் தெரியும். ஆனாலென்ன? நம் நாட்டவர் என்ற அபிமான மில்லாமையே மிக விசனிக்கத் தக்கதா யிருக்கிறது.

### நாம் பெற்றதென்ன?

நாம் நமது உடல் பொருள் ஆவி மூன்றையும் தந்து பெற்ற பலன் யாது? நம்மிடத்து அவநம்பிக்கை; நாம் நமது சுதந்திரங்களைக் கேட்கிறோம் என்கிற வெறுப்பு; இவையே நாம் காட்டிய நன்றிக்குக் கைம்மாறாக நமக்குக் கிடைத்திருப்பவை. நம்மிடத்தில் பிரிட்டனுக்குள்ள அவநம்பிக்கை ஒன்று மட்டும் ஒழிந்திருக்குமானால் 1919-ம் வருஷத்துக்கு முன்பே நமக்கு ஜார்ஜ் மன்னர் கூறியபடி சுயராஜ்யம் கிடைத்திருக்கும். தற்காலம் சுயராஜ்யம் என்பது முயற்கொம்பாகப் போகும்படி செய்ய முயல்வதுமட்டுமே யல்லாது நாம் ஒற்றுமையற்றவர்கள், ஆளும் திறமையற்றவர்கள், மேற்கு முறைகளை யநுசரியாதவர்கள், அநாகரிகர்கள் என்று குற்றமெல்லாம் நம் மீது சாட்டப்படுகின்றன. குதிரை கீழே தள்ளிவிட்டது போதாதென்று குழியையும் பறித்ததாம் என்ற கதையாகவுள்ளது இது. இனியாவது நாமும் நம் சந்ததியாரும் இம்மாதிரியான ஏமாற்றல்களுக் குட்படாமல் நமது சுய மரியாதையை நாம் காத்துக்கொள்வதற்கான முயற்சிகளில் தோள் கொடுக்க வேண்டாமா? பழைய நன்றிகளுக்குக் கைம்மாறு காட்டுவது உண்மையேயானால் நம்முடைய சுயவுரிமைப் போருக்குச் சரியான நெறிகளைக் காட்டி நாம் நமது சுதந்திரத்தைப் பெறுமாறு பார்க்க வேண்டியது நமது பிரிட்டன் கடமையல்லவா? நாம் நம்மை ஒழுங்கு முறைகளில் கட்டுப்படுத்திக்கொண்டு நடக்கவும் நமது குறைகளைத் தீர்க்கவும் முன் வரவேண்டிய காலம் சமீபித்திருக்கிறது. அதனால் தான் தமிழ் மகா ஜனங்களே! உள்ள நிலையை உள்ளவா றறிந்து ஒற்றுமைப்படுங்கள் என்று பறைசாற்றுவது. நமது தற்கால நிலைமையைத் தக்கபடி உணராமல் கண்மூடித்தனமாக 'ஜாதி யென்றும், மதமென்றும், செல்வனென்றும், ஏழை யென்றும், முதலாளி யென்றும், தொழிலாளி யென்றும் பேதப்படுத்திக் கொண்டு நாட்டிற் கலக விதைகளை விதைப்பீர்களாயின் நாடு பாழாய்ப் போய்விடும். எச்சரிக்கை! எச்சரிக்கையென்று முக்காலமும் முழங்குகிறார்கள் நமது காங்கரஸ்காரர்கள். இது நம் கண்ணைத் திறக்க வேண்டாமா? தமிழர்களே ஒன்றுபடுங்கள் என்பதன் கருத்து இதுவே. 'ஒன்று பட்டாலுண்டு வாழ்வு' என்றார் தமிழ்க் கவி யரசராகிய நம்பாரதியார்.

---

எகிப்தில் கி. மு. 109-ம் ஆண்டில் எழுதப்பட்ட கடன் பத்திரம் ஒன்று கிடைத்திருக்கிறது. இதனால் அக்காலத்தும் கடன் கொடுத்தல் வாங்கல் முதலியன இருந்தனவென்று தெரிகிறது. ஆனால் வட்டிமட்டும் வருஷத்துக்கு நூறு சதவிகிதம் வசூலித்ததாகத் தெரிகிறது.

# ஒரு பெரிய வியோகம்

(ஒரு நிருபர்)

தமிழ் நாட்டுக்கு ஓர் அணியென்னத் தக்கவராயும், ரிக்வேதத்தைத் தமிழில் பாட்டும் உரையுமாகச் செய்துகொண்டு வருபவராயுமுள்ள சிவத்தியானந்த மஹரிஷியின் உத்தம மனைவியார் ஸௌபாக்கியவதி ஜானகியம்மாள் தமது 52-வது வயதில் இவ்வுலக வாழ்வைநீத்தது பெரிதும் விசனிக்கத் தக்கதாம். தமிழில் ரிக்வேதம் வெளிவருவதற்கெனத் தமது உடல் பொருள் ஆவி மூன்றையும் அளித்த இம்மாது தவறியது தமிழ் நாட்டுக்கே ஒரு நஷ்டமெனச் சொல்லுவோம். வேதத்தைத் தமிழ்ப் படுத்தத் தமிழரது உதவி சிறிதாயிருக்க இவரது உதவியே மிகப் பெரிதா யமைந்ததாகும். அம்மையார் நல்ல உயர்ந்த மத்துவ குடும்பத்திற் பிறந்து தமது பிறந்தகத்து வேதம் தமிழிலும் வரவேண்டு மெனப் பெரிதும் பாடுபட்டார்; அடிசிற்கினியராய் அன்புடையராய்ப் பதியினது சகல சௌகரியங்களையும் கவனித்து அவர் தமது கல்வி முயற்சியில் பெரிதும் ஈடுபடுமாறு ஊக்கிவந்தார். அன்னார் ஜனவரிமீ 1உ வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்குத் தேகவியோக மடைந்தாரெனக் கேட்கப் பெரிதும் விசனிக்கிறோம். அவரது ஆத்மா சாந்தி பெறுவதாக! சிவத்தியானந்த மஹரிஷியின் சுய சரித்திரத்தில் இந்த அம்மையாரைப் பற்றிப் பின் வருஞ் செய்யுட்கள் காணப் படுகின்றன.

வடதிசையரங்க மென்ன வயங்குநெல்
லூர்க்கட் டோன்றி
உடலுறு சேவனீசனுருவினை
யெய்தா னென்றே
அடலுறச் சாதிக்குஞ்சீர்
மத்துவ மதத்தணைந்து
திடமுறுபத்தி வாய்ந்த
அந்தணக்குடி கடம்மில். 125

வர்முறு வோங்கி நிற்கு
நீதியின் மருவி யென்றுந்
தாமுற வியாபகித்தொல்
குடியினிற் பிறந்து சார்ந்தே
உராமுறு குடி மற்றொன்று
மத்துவ பதியாரில்லிற்
றிருவென வாழ்ந்து கொண்டா
ளென்றிசை போ நின்றாள். 126

அன்னவளா மிம்மாது
பழகுமந்தணச் சமூகக்
கின்னமெல்லாங் கழற்றுங்
கேழின ளிருளார்பாதை
தன்ன மூமியலாள் சேஷ
கிரியெனுந்தந்தை பெற்று
ளன்னையு மநுமானு யியென்
பாலவட்கு மன்னே. 127

தன்னருங் குடியினேற்றந்
தாங்குவதாகக்கூறி
மன்னுபல் கயமை யெல்லா
மறைவினிற் புரிந்து வேடந்
துன்னு மாஷாடப்பூதி
வாழ்க்கையோர் தமைத் தொலைக்க
உன்னிவேறோர் கணவன்றனை
மணந்திட வொத்தாளே. 128

---

உலக முழுவதும் 3,40,00,000க்கு மேற்பட்ட டெலிபோன்கள் இருக்கின்றன. லண்டனில் 10,00,000-ம், கிரேட் பிரிட்டனில் 27,00,000-ம், அமெரிக்காவில் 1,74,24,000-ம் இருக்கின்றன. நியூயார்க் நகரத்தில்மட்டும் 15,06,100 டெலிபோன்கள் இருக்கின்றனவாம்.





# எமனின் வேலையில்லாத் திண்டாட்டம்

## புளித்த தயிர் சாப்பிடுங்கள்!

### பழங் கறி வேண்டாம்!

அலங்கியம் கிராமத்தில் சென்ற மாதம் நடைபெற்ற சுகாதார விழாவின் போது மணியம் கு. இரத்னவேல் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரம் வருமாறு:-

தோழர்களே! 'நமனார்க்கிங் கேது கவை நாமிருக்கு மிடத்தே' என இறுமாப்புடன் கூறிப்போந்தவர் நம் தமிழ் நாட்டின் தவப் பெரியாராகிய தேரையர் என்பவரே. தேரையர் பதினெண் சித்தர்களில் தலை சிறந்தவர்; இரசவாதி; சிறந்த சித்புருடர்; உயர்ந்த மருத்துவர்; மேலான ஞானி.

அன்னார் கூறியுள்ள 'நோயணுகா விதி' எனும் பாடல்களில் எமனுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் உண்டாகக் கூடிய வழிகளைக் கூறியுள்ளார்.

"பாலுண்போம் எண்ணெய் பெறின்
வெந்நீரிற் குளிப்போம்
பகற் புணரோம் பகற் றுயிலோம்
பயோதாமு மூத்த
ஏலஞ்சேர் குழலிய ரோடிள
வெயிலும் விரும்போம்
இரண்டடக் கோம் ஒன்றை விடோம்
இடதுகை யிற் படுப்போம்
மூலம்சேர் கறி நுகரோம்
மூத்த தயிருண்போம்
முதல் நாளிற் சமைத்த கறி
அமுதெனினும் விரும்போம்
ஞாலமே எய்திடினும்
பசித் தொழியப் புசியோம்
நமனார்க்கிங் கேது கவை
நாமிருக்கு மிடத்தே."

### பாலுண்போம்

அன்பர்களே! முதலாவதாகப் 'பாலுண்போம்' என ஆசிரியர் ஆரம்பித்துள்ளார். உணவிற்குச் சிறந்ததும், சத்துள்ளதும் பால் ஆகாரமே. பாலில் மனிதனுக்குத் தேவையாக வுள்ள, ஜீவ சத்தும், (விடமின்) கொழுப்பு ஆகாரமும், எலும்புக்கு வலிவையூட்டும் சத்தும் அதிகமாக உள்ளன. ஆதலால் மனித உணவிற் சிறந்ததாக மதிக்கப்படுவது பாலே.

நம் கிராமங்களில் பாலின் மேன்மை தெரியாது, காசுக்கு ஆசைப்பட்டுப்பாலை விலைக்கு விற்றுவிட்டுச் சத்தில்லா - உணவுப் பண்டங்களை மக்கள் வாங்கியுண்கிறார்கள். கறவை மாடுள்ள இடங்களிலும் - வீடுகளில் - வேண்டியவளவு பால், தயிர், மோர், நெய் முதலியவைகளை உபயோகப் படுத்துவதில்லை. இனியாவது பாலின் சத்து மிகுந்த தன்மை தெரிந்து, அதிகமாகப் பாலை உபயோகம் செய்வீர்களாக.

### எண்ணெய்பெறின் வெந்நீரிற் குளிப்போம்

நம் நாட்டிலே தொன்று தொட்டு எண்ணெய் ஸ்நானம் சிறப்பாகக் கையாளப்பெற்றுவருகிறது. உஷ்ணப்பிரதேச வாசிகளுக்கு எண்ணெய் ஸ்நானம் மிகவும் அவசியம். உஷ்ண மிகுதியால் ஏற்படும் சர்ம வறட்சியைப் போக்கிச் சதையை மிருதுவாக்கி, மயிர்க் கால்களின் வழியாக உடம்பில் ஊறி, உடற்சோர்வை நீக்கித் தேகசுகத்தைத் தருவது எண்ணெய். எண்ணெய் ஸ்நானம் செய்யும் காலத்தே இளவெந்நீரில் குளிக்கவேண்டும். நமது கிராமாந்திரங்களில் எண்ணெயைத் தலை, உடல்களில் தேய்த்துக் கொண்டு வாய்க்காலில் குளிர்ந்த நீரில் மக்கள் குளிக்கிறார்கள். இது தப்பு. ஏனெனில் எண்ணெய் ஊறித் தேகம் இளகித் தளர்வுற்றிருக்கும் சமயத்தில் குளிர்ந்த நீர் தேகத்தில் சம்பந்தப்பட்டவுடன், தலைவலி, தலையில் நீர்கோத்தல், சளி, குளிர் முதலான நோய்கள் உண்டாகக்கூடும். ஆதலால் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்வதாக இருந்தால் வெந்நீரிலேயே குளித்தல்வேண்டும்.

### பகற் புணரோம்

பகற்காலத்தே, பெண்களுடன் கூடலாகாது. இரவுக்காலங்களே கூடுதற்குத் தக்க காலம். குளிர்ந்தகாற்று, நிலவு, விண்மீன், ஓய்வுநேரம், அமைதியான உலகம், கவலையற்றமனம், நிசப்தமான நிலை, இன்னோரன்ன பல அநுகூலங்கள் வாய்ந்த காலமே—இரவு காலமே—இன்பந்துய்க்க ஏற்ற சமயம். பகற்காலத்தே எதிர்பாராத உழைப்பு, உஷ்ண வெம்மை, உடல் வியர்வை, துர்நாற்றம் முதலான பிரதி கூலங்கள் அனேக முள. ஈண்டு விரிக்கிற் பெருகும். ஆதலால் பகற்காலத்தே பாவையரைப் புணரலாகாது.

### பகற்றுயிலோம்

பகற்காலங்களில் உறங்குவது மகா கெடுதலானது. நமது வாழ்நாளிற் பாதி காலம் தூக்கத்தில் கழிகிறதே எனப் பரிதவித்துக் கூறியுள்ளார் ஒரு பெரியார். இரவு காலத்தே—உலகமே அமைதியாக உறங்குங்காலத்தே—உறங்கிவிட்டு மறுபடியும் பகற்காலத்தே—உலகம் சுறுசுறுப்பாகத் தொழிலாற்றுங்காலத்தே—சோம்பேறித் தனமாகத் தூங்குவது சரியா? என அன்பர்களே சற்றுச் சிந்தியுங்கள். அதிக தூக்கம் - பகற்றூக்கம் - சோம்பலை விருத்திசெய்யும்; முகக்களையைப்போக்கும்; விகாரத்தை உண்டுபண்ணும்; சதா கொட்டாவிவிட்டு உட்கார்ந்திருக்கச் செய்யும். தொழிலில் கவனம் செல்லாது. ஆதலால் பகல் உறக்கத்தைவிடுவோமாக.

### மூத்த பெண்களை விரும்போம்

நமது வயதுக்கு மூத்த பெண்களுடன் நாம் சேருந்தோறும் நமது ஜீவ சக்தி மிகவும் குன்றும். பொதுவாக நம் நாட்டில் பெரியோர்கள் ஆண்களின் வயதுக்குக் குறைவான வயதுடைய பெண்களையே தம்பதிகளாகத் தேர்ந்தெடுக்கிறார்கள். ஆடவர்களின் வயதுக்குச் சுமார் எட்டு அல்லது பத்து வருஷம் குறைந்த வயதுள்ள பெண்களே கூடத்தக்கவர்களாவார்கள். வயதுக்கு மூத்த பெண்களைப் புணர்ந்தால் நம் ஆயுள் குறைவதில் சந்தேகம் இல்லை.

### இள வெயிலை விரும்போம்

சூரியன் உதித்து ஏறும் வெயிலில் நாம் காயலாகாது. அவ்வெயில் பிணிகளெல்லாம் ஏறுதற்குக் காரணமாகும். அதனால், சுரம், தலைநோய், உடல் வறட்சி முதலான வியாதிகள் வருவதுடன் சோம்பலையும் மிகுதியாக வருவிக்கும் ஆதலால் ஏறும் இளவெயிலில் காயலாகாது.

### இரண்டடக்கோம்

நண்பர்களே! இவ்விஷயம் மிகவும் முக்கியமானது. இரண்டு என்பது மல, ஜலம். இவ்விரண்டையும் அடக்கலாகாது. மலத்தை அடக்குவதால் மலச்சிக்கல் ஏற்பட்டு மூலம் முதலான நோய்களும் மற்றும் பல ரோகங்களும் உண்டாகின்றன. கக்கூஸ்களிற் போய்ச் சேரவேண்டிய மலஜலங்களை நாம் வயிற்றுக் குள்ளேயே வைத்து வயிற்றை கக்கூஸாகச் செய்து விடுகிறோம். அம்மலம், நாற்றமெடுத்துக் குடலில் தங்க அத்துர்நாற்றம் தேகமெங்குமுள்ள இரத்தத்தில் கலந்து, சொறி சிரங்கு கரப்பான் முதலான பல நோய்களை உண்டுபண்ணுகிறது. அநேகமாக வியாதிகளுக்கு முக்கிய காரணம் மலச்சிக்கலே. ஆதலால் மல ஜலங்களை அடக்காமல் உடனுக்குடனே கழித்துவிட வேண்டியது அவசியம்.

### ஒன்றை விடோம்

ஒன்று என்பது விந்து. அதை நாம் வீண்விரயம் செய்யலாகாது. நாம் சாப்பிடும் ஆகாரம் அன்ன ரசமாக மாறி, அவ்வன்னரசம் ரத்தமாகமாறுகிறது. இரத்தத்தின் எண்பது துளியின் சாரமே ஒரு துளி விந்துவாக மாறுகிறது. நமது தேகத்திலிருந்து கொஞ்சம் இரத்தம் வெளிவந்தாலும் நாம் எவ்வளவு ஆயாசமும் வருத்தமும் அடைகிறோம். ஆனால் இரத்தத்தின் சத்தான விந்து நாசமாவதை நாம் பொருட்படுத்துவதில்லை. நம் ஜீவசக்தியே விந்து. அதை நாம் பத்திரமாகக் காப்பாற்றவேண்டும். அந்த ஜீவமணியான விந்து உள்ளிருக்கும் போதும் இன்பம்; வெளிவரும்போதும் இன்பம். ஆனால் வெளியில் வந்துவிட்டாலோ? அந்தோ! துன்பம்!! துன்பம்!!! 'விந்து விட்டயோ? நொந்து கெட்டயோ?' என்பது பொன்போன்ற பழமொழி. ஆதலால் நாம் நமனை எதிர்த்து வெல்ல வேண்டுமேன்றால் விந்தைவிடாது காப்பாற்றுவது அவசியம். அதனால் ஆயுள் வளரும்.

### இடதுகையிற் படுப்போம்

நாம் படுத்துறங்குங் காலத்தே இடது புறமாகச் சயனித்தல்வேண்டும். ஏனெனில் வலது புறத்தே ஜலாசயமிருப்பதால், நாம் வலது கைப்புறமாகப் படுக்குங்காலத்தே ஜலாசயத்தை மலக்குடல் முதலானவைகள் அழுத்துகின்றன. அதனால் அடிக்கடி நீர் உபாதையும், நரம்பு எழுச்சியும் உண்டாகின்றன. தவிரவும், இடதுகைப் புறம் படுப்பதால் சூரியகலை ஓடுகிறது. அதனால் ஆயுள் விருத்தியுண்டாகிறது. விரிக்கிற் பெருகுமாதலால் விடுக்கின்றேன்.

### மூலம்சேர் கறி நுகரோம்

மூல வியாதி யுண்டு செய்யக்கூடிய காய்கறி கிழங்கு முதலானவைகளையும், வாயு சம்பந்தமான மொச்சை, தட்டை முதலானவைகளையும் விலக்க வேண்டும். பூசனிக் காய், சுரைக் காய், காளான், பூண்டு முதலான காய் கறி வகைகளை விலக்கியும், ஜீவ சத்துள்ள ஆகாரங்களையும், காய்கறிகளையும் உபயோகித்தும் வரல்வேண்டும். பச்சைக் காய்களும், பழ வகைகளும் உடம்புக்கு நலந்தரத்தக்கவை.

### மூத்த தயிருண்போம்

புளித்த தயிரையே உபயோகப்படுத்த வேண்டும். இரவு காலங்களில் தயிரை உணவுக்காகச் சேர்த்தலுமுண்டு. புளிப்பேறுத அப்போதுதான் துவைத்த தயிர் ஆகாரத்துக்கு ஏற்றதல்ல. அதைக் கடைந்து மோராக மாற்றிச் சேர்த்துக் கொள்வது நலம்.

நீர் காய்ச்சி, மோர் பெருக்கி, நெய்யுருக்கி உண்பவர் நோயற்ற வாழ் வெய்துவர். புளியாத தயிர் சேர்த்தால் வயிற்றுப் பொருமல், அஜீரணம், வயிற்றுவலி முதலான நோய்கள் உண்டாகும். ஆதலால் புளித்ததயிர் அல்லது மோர் உபயோகப்படுத்துவது நன்மை.

### முதல் நாளிற் சமைத்த கறி விரும்போம்

சுகாதார விதிப்படி ஆறிப்போன ஆகாரங்களையே அருந்துதல் கூடாது. அப்படியிருக்க முதல் நாளிலே சமைத்த காய் வகைகளையும் குழம்புகளையும், சாதத்தையும் உண்ணுதல் ஆரோக்கியத்துக்கு மிகவும் குறைவையுண்டாக்கும். ஆதலால் பழைய, ஆறிய எந்த வஸ்துக்களையும் உண்ணுது சுடச் சுடச் சாப்பிடவேண்டும். அப்போதே ஆகாரம் ருசியாகவும், உணவு சுகிரமாகவும், அருந்த ஏற்றதாகவும் இருக்கும்.

### பசித்தொழியப் புசியோம்

பசித்த பிறகு புசிப்பதுதான் நலம். வயிறு ஆகாரங்களைச் சீரணம் செய்த பிறகே மறுபடியும் வயிற்றுக்கு உணவு கொடுக்க வேண்டும். அஃதின்றி மென்மேலும் வயிற்றிற்குள் ஆகாரத்தைத் திணித்துக் கொண்டிருந்தால் ஜீரணக் கருவிகள் சோர்வுற்று, அஜீரணமுண்டாகி, ஆகாரம் ஜீரணித்து அன்னரசமாக மாறுவதற்கின்றி, ஆகாரம் மலமாக வெளிவந்து நமது தேக ஆரோக்கியத்தைக் கெடுக்கும். ஆதலால் நன்றாகப் பசித்தபின் புசிப்பது நன்மை என மேலோர் கூறிப் போந்தனர். ஆதலால் பசித்துப் புசிக்கவேண்டும்.

தோழர்களே! இப்படி மூன்று குறிப்புக்களையும் மனதிற் கொண்டு அவைகளின்படி நடந்துவந்தால் நாம் இறுமாப்புடன் 'ஹே! நமனே உனக்கிங் கென்ன வேலை. ஓடிப்போ' வென்று தைரியமாகக் கூறலாம். ஆதலால் இம்முறைகளைப் பின் பற்றி நடந்து நோயற்ற சுகவாழ்வைப் பெறுவோமாக.

Printed at the Sadhu Press: Published by T. V. Kalyanasundaran (Editor) 12, Ganapathi Mudali Street, Royapettah, Madras.

